*Kumaraṉ*

*Āram 19, muttu 52*

*August 13, 1942*

Record no. 313

REGD. NO. M. 1823. 12 பக்கங்கள். விலை 0—1—6

சந்தா விவரம்
உள்நாடு வருஷம் ஒன்றுக்கு ரூ. 5—0—0
ஆறு மாதம் 3—0—0
சிலோன் ரூ. 6—0—0
பர்மா, மலாய் முதலிய வெளிநாடு வருஷம் 1-க்கு ரூ. 7—0—0

# குமரன்

விளம்பரம்.
நோட்டீஸ், கோர்ட் விளம்பரம் முதலியவைகளுக்கு இஞ்சு ஒன்றுக்கு ரூ. 2—0—0
வியாபார சம்பந்தமானது ரூ. 0—12—0
ஒப்பந்த விளம்பரத்துக்கு மானேஜருக்கெழுதவும்.

வியாழன்தோறும் வெளிவரும் மாதப் பதிப்பும் சேர்ந்தது PUBLISHED EVERY THURSDAY

ஆரம் 19 | காரைக்குடி சித்திரபானு-ஞு ஆடி-மீ 29-உ (13—8—42) | முத்து 52

## சீன மாதர் செய்திடும் தேச சேவை

### இந்திய மாதர்களுக்கு ஸ்ரீமதி சியாங்கின் வேண்டுகோள்

[மிஸ் ஜீன் ஜே. மெக்கே, டாக்கா ரேடியோவில் பேசியது]

ஸ்ரீமதி சியாங்கை—ஷேக் தற்கால சீன மாதருக்கு ஒரு எடுத்துக்காட்டாக விளங்குகிறார். அவர்களுடைய உள்ளத்திலே உணர்ச்சியைப் பெருக்கி வருபவர் அவர்தான். இவ்வம்மையார் முன்னர் விமான உதவி மந்திரியாயிருந்து அரும் பணியாற்றினார். இப்போது யுத்தப் பரிகாரவேலைக்கே தலைமை வகித்து வருகிறார். அவர் அடிக்கடி ஆஸ்பத்திரிகளுக்குச் சென்று பார்வையிடுகிறார். அங்கே சோல்ஜர்களுக்குத் தாமே கட்டுங் கட்டுகிறார். எல்லாவற்றிற்கும் மேலாக பழைய சம்பிரதாயங்களையும் புதிய கருத்துக்களையும் சேர்த்து சீன மக்களுக்கு ஊட்டி வரும் நவஜீவன் இயக்கத்தை நடத்துபவர் அவர்தான்.

ஆனால் இன்னும் எவ்வளவோ சீன மாதர்கள் வெளிக்குப் பெயர் தெரியாமலே அரிய தொண்டு செய்து வருகிறார்கள். சீன—ஜப்பானியப் போருக்கு முன்னே சீனாவில் புதிய சக்திகள் பல வேலை செய்யலாயின. சீன மாகாணங்களெல்லாம் ஐக்கியப்படலாயின. தேசீய உணர்ச்சி வளரலாயிற்று. தொழில்கள் பெருகலாயின; புராதனமான சீனக் கலைவளத்தோடு சேர்ந்து மேற்கத்தியக் கல்வியும் பரவலாயிற்று; எழுத்து வாசனையறியாதவர்களெல்லாம் படிக்க ஆரம்பித்தனர்; பொது உடமைக் கொள்கை நாட்டில் வேரூன்றலாயிற்று; மாதர்கள் அர்த்தமற்ற பழங் கொள்கைகளினின்று விடுபடலாயினர். இந்தப் புரட்சி, நவீன சீனாவின் தோற்றம் அதற்கு முன் கண்டறியாததொரு சுதந்திரத்தை அவர்களுக்களித்தது.

அப்புறந்தான் ஜப்பான் தாக்கலாயிற்று. கீழ்த் திசையிலே தனக்கருகிலே மற்றொரு வல்லரசா என்ற அங்கலாய்ப்பு ஜப்பானுக்கு. ஆனால் இதை எதிர்த்து நிற்பதற்குத் தயாராய் யுத்த முஸ்தீப்பு செய்திராவிட்டாலும் உணர்ச்சி விஷயத்தில் சீனா தயாராய்த்தானிருந்தது. ஆணும் பெண்ணும் சேர்ந்து ஐந்து வருஷத்துக்கு மேலாக ஆக்ரோஷத்துடன் எதிரியை எதிர்த்து நடத்திவரும் இந்தப் போராட்டத்திலும் அவர்கள் தங்களுக்கு ஆன்ம பலமும் எதிர்ப்புச் சக்தியும் கொடுத்த அந்தப் புனர் நிர்மாண வேலையைக் கைவிட்டு விடவில்லை. விழித்தெழுந்த சீனா நடத்தும் வேலையின் வேகத்தை எங்கும் எவரும் உணரலாயினர் என்கிறார் டாக்டர் கூ.

### மாதர்கள் கைங்கரியம்

இங்கேதான் பெண்களின் சிறப்பு விளங்குகிறது. ஆண்களைப் போர்க்களத்துக்கு அனுப்பிவிட்டு அவர்கள் புனர் நிர்மாண வேலையில் ஈடுபட்டனர். ஜப்பான் அவர்களுடைய புதுத் தொழில்களை அழித்துவிட்டதா? சரி, சீனப் பெண்கள் சீனத் தொழிற் கூட்டுறவு ஸ்தாபனங்களில் சேர்ந்து வேண்டியதைத் தயாரிக்கலானார்கள். ஜப்பானுக் கிரையான பிரதேசங்களிலிருந்து லக்ஷக் கணக்கான பெண்கள் அகதிகளாய் ஓடி வந்திருக்கிறார்களா? சரி, இந்த ஸ்தாபனத்தார் அவர்களுக்குத் தொழில் கற்பித்து காட்டுக்குப் பயன்படச் செய்கிறார்கள். யுத்தத்தினால் 15 லட்சம் குழந்தைகள் திக்கற்றுப் போய்விட்டார்களா? அவர்களுக்குச் சகல வசதிகளும் செய்து கொடுக்கப் பெண்கள் தயாராயிருக்கிறார்கள். போரில் காயமுண்ட சோல்ஜர்கள் உதவி வேண்டிக் கிடக்கிறார்களா? சீனப் பெண்கள் அவர்களுக்குச் சிகிச்சை செய்வது மட்டுமன்றிக் கல்வியும் கற்பிக்கிறார்கள். அப்புறம் யுத்தப் பிரசாரம் செய்யவேண்டுமா? அதற்கும் இளம் பெண்கள் ஆயிரக் கணக்கில் பயிற்சி பெற்றுச் செல்கிறார்கள்.

இவையெல்லாம் போதாதென்று இந்த வீரமங்கையர் போர்க்களத்தில் நின்றும் தங்கள் நாட்டுக்காகப் போராடுகிறார்கள். தற்போது 5000—6000 பெண்கள் ஆண்களுடன் தோளோடு தோள் நின்று போர் புரிந்து வருகின்றனர்.

### கோரில்லாப் படையிலும்

இது போக, கொரில்லாப் போரிலும் இவர்கள் பெரும் பங்கெடுத்துக் கொள்ளுகிறார்கள். உண்மையில் முதல் கொரில்லாப் படையை அமைத்ததே ஒரு பெண்மணிதான். சிறிது காலத்துக்கு முன்னே, சீனத் தொழில் கூட்டுறவுத் தலைவர்களில் ஒருவரான பெண்மணி யொருவர் சொன்னார், "நாங்கள் உண்மையிலேயே நாட்டுக்கு அவசியமான தொண்டு செய்ய முடியும் என்று நிரூபித்துவிட்டால், நாங்கள் கஷ்டங்களைத் தாங்கி, பொருளாதாரத் துறையில் ஆண்கள் ஆதரவின்றி நாங்களாகவே வாழ முடியுமென்று நிரூபித்துவிட்டால், இந்த யுத்த முடிவில் சீனப் பெண்கள் நிலைமை 1937 லிருந்ததை விட எவ்வளவோ மேலாயிருக்கும்" என்று. ஆமாம், அப்பொழுது அவர்கள் சீனாவின் சுதந்தரத்தையே காப்பாற்றியவர்களாய் விளங்குவார்களல்லவா?

ஆகவே, இந்திய மாதர்களுக்கு ஸ்ரீமதி சியாங் கை-ஷேக் விடுத்திருக்கும் வேண்டுகோள் இதுதான்: "கலாசார விஷயத்தில் சீனாவோடு பிணைந்து கிடக்கும் இந்திய மாதர்கள், நீறு பூத்த நெருப்பு போல் ஊர் பேர் தெரியாமல் தங்கள் நாட்டின் சுதந்திரத்துக்காகப் போராடிவரும் ஆயிரக் கணக்கான சீனப் பெண்மணிகளுக்குத் தங்கள் அனுதாபத்தையும் ஒத்துழைப்பையும் அளிக்கவேண்டும்; அப்படியும் அவசியம் நேரிடுமாயின் அவர்கள் சீன மாதர்களைப்போல தங்களைத் தாங்களே காத்துக் கொள்ளத் தயாராயிருக்க வேண்டும். தங்கள் பழம் பண்புகளை, தங்கள் சுதந்தரத்தைக் காப்பாற்றுவதற்காகத் தாங்களும் எவ்வளவோ செய்யக்கிடக்கிறது. தாங்களும் எவ்வளவோ தியாகம் புரிய வேண்டியிருக்கிறது என்பதை அவர்கள் உணரவேண்டும்."

---

"பதினாயிர வருஷ காலம் உயிரோடிருக்கப் போவதாக எண்ணி நடவாதே. மரணம் உனக்காக எப்பொழுதும் காத்துக் கொண்டிருக்கிறது. உடலில் உயிருள்ள பொழுதே நல்வினை செய், உயிர் போன பிறகு உனக்கு எதும் செய்ய சாத்தியமிராது."

—மார்க்க ஔரேலியன்.

சென்ற வருஷம் ஆகஸ்டு மீ கவியரசர் ரவீந்திரநாத் தாகூர் இவ்வுலக வாழ்வை நீத்தார். இப்போது அவர் பிரிந்து ஒரு வருஷமாகிறது. அந்த உலகப் பெரியாரின் நினைவு மலராக அன்பு நிலையத்தார் * இந்நூலை வெளியிட்டிருக்கின்றனர். தாகூரின் வாழ்க்கை, கவிதை, கட்டுரை, நாடகம், கடிதம் எல்லாம் நமக்குப் பற்பல விதத்தில் சுவையூட்டுவன; சுவையுடன் அறிவூட்டுவனவாகும். "பாரத இதயத்தைச் சுதேச மொழியால் உலகறியச் செய்த விசுவகவி தாகூர்" என்று காலஞ்சென்ற தீனபந்து ஆந்த்ரூஸ் இந்தக் கவியரசுக்குப் புகழ்மாலை சூட்டியிருக்கிறார். உலகிலுள்ள பெரிய பெரிய மேதாவிகள் எல்லாம் தாகூரின் மேதையை நன்குணர்ந்து போற்றினார்கள். அவர்கள் மூலம் இந்தியா பெருமை பெற்றது.

தலை நிமிர்ந்து பரதநாடு
தழைக்கவுதித்த கவிதை
கலையுலகம் வியந்து போற்றக்
கதிர்பர விடும் புதுயுகக் கவி

என்று சுவாமிஜி பெருமையுடன் தலை நிமிர்ந்து பாடுகிறார்.

தாகூர் தாய்மொழிப் பற்று மிக்குடையவர். தமிழர்க்கு அவர் ஒரு அரிய பாடம் போதித்துள்ளார். தாகூர் ஒரு சமயம் மதுரைக்கு வந்திருந்தபோது நடந்த ருசிகரமான சம்பவத்தை சுவாமிஜி ஓரிடத்தில் வர்ணிக்கிறார். கவியரசரின் தாய்மொழிப் பற்று எவ்வளவு ஆழமுடையதாயிருந்தது என்பதை அது நன்கு விளக்குகிறது: "நண்பர் சிலர் அவரைப் பார்க்கச் சென்றிருந்தோம். நானும் நண்பரொருவரும் ஆங்கிலத்தில் கவிமாலை பாடிச் சென்றோம். நண்பர் ஆங்கிலத்தில் மகா மேதாவி; நன்றாகப் பாடுவார். தாகூருக்குத் தமிழ் வராது. ஆகையால் 'நமது புகழ்மாலையை ஆங்கிலத்தில் சூட்டுவோம்' என்றே நான் எண்ணினேன். எங்களை அவர் புன்னகையுடன் வரவேற்றார். நமது நாட்டுக்கலை விஷயமாகப் பேசினார். பிறகு தகுந்த புலவர்

* அன்பு நிலைய வெளியீடு. பக்கம்: 165. விலை: ரூ 1-8-0. கிடைக்குமிடம்: அன்பு நிலயம், இராமச்சந்திரபுரம், திருச்சி ஜில்லா.

மதிப்புரை

# வரகவி தாகூர்

★

[ஆசிரியர்: சுவாமி சுத்தானந்த பாரதியார்]

கிடைத்தால் தமிழுக்கும் சாந்திநிகேதனில் ஒரு பவனம் அமைக்கலாம் என்றார். அச்சமயம் என் நண்பர் தமது புகழ்மாலையைத் தந்தார். தாகூர் பார்த்து 'இந்த மாதிரி தங்கள் தாய் மொழியில் பாடினால் நன்றாயிருக்குமே! நம்மவர் தாய் மொழியை மறந்து, பிழைப்புக்குக் கற்ற அன்னிய மொழியில் கவிபாடுவது பொருத்தமில்லாத வழக்கம். இந்தியர் சுதேச பாஷைகளை வளர்க்க வேண்டும். எனது வங்க ஹிருதயம் வங்கத்திலேயே பாடும். தமிழ் ஹிருதயம் தமிழிலேயே பாடுவது நல்லது. குயிலுக்குத் தன் பாட்டுத் தான் பொருத்தமாகும். குயில் கிளியை அபிநயித்தல் பொருந்தாது' என்றார். இம்மொழிகளை அவர் புன்னகையுடன் தாடியை நாலுதரம் உருவிக்கொண்டு சாந்தமாகவே சொன்னார். உடனே, எனது கவிதையைப் பைக்குள் திணித்துக் கொண்டேன். தாகூரின் தாய் மொழியன்பு எனக்குப் புதிய எழுச்சி தந்தது. அவர் வங்கத்திலேதான் எதையும் எழுதுகிறார். பிறகு ஆங்கில மொழி பெயர்ப்பு நடக்கிறது". இந்த மாதிரியான பல ரசமான, உணர்ச்சியும் போதனையும் ஊட்டும் சம்பவங்கள் இந்நூல் முழுவதும் பரந்து காணப்படுகின்றன. தாகூரின் வாழ்க்கை முழுமையும் நமக்கு நல்ல பாடம் போதிக்கும் ஜீவிய நூல்தானே?

கவிதையும், கலையும் எங்கே பிறக்கும்? நிலம் எவ்வாறு பண்பட்டிருக்க வேண்டும்? சுற்றுச் சார்புகள் எவ்வாறு அமைந்திருக்க வேண்டும்? கால வேறுபாடுகளும், சமய சந்தர்ப்பங்களும், வாழ்க்கையின் மேடு பள்ளங்களும் இன்ப துன்பங்களும் அவற்றின் போக்கை எவ்வாறு அமைக்கின்றன?—என்ற விவரங்களை இந்நூல் கவியரசரின் வாழ்க்கை மூலம் நமக்கு விரிவாக விளக்குகின்றது. "தாகூர் குடும்பமே கலைக்குடும்பம் * * * குடும்பத்தில் எல்லாருக்கும் பாட்டு வரும். காவியம், ஓவியம், பாட்டு, நடனம், நாடகம், வேதாந்தம், இலக்கியம்—இவற்றால் அத்திருமகன் விலாசம் கலைமகள் விலாசமாயிருந்தது. இவர்களை ஈன்ற தந்தை மகரிஷி; தாய் சாரதா தேவி; வீடும் சாரதா நிலயந்தான். அதன் கலைமணத்தில் ஊறிவளர்ந்த நமது இரவியும் கவியாக மலர்ந்ததில் வியப்பில்லை"—இவ்வாறு கவிதை நடையில் வர்ணிக்கிறார் சுவாமிஜி. தாகூர் உலகுக்குத் தந்த நூல்கள் எண்ணற்றன. அவர் பத்துவயதுப் பிராயத்திலேயே கவி இயற்ற ஆரம்பித்து விட்டாரல்லவா? அவரது வாழ்க்கை ஒரு பெரிய இலக்கியம் போன்றது. அதை ஒரு சிறு நூலில் அடக்க முடியுமா? எனினும் சுவாமிஜி அவர்கள் தம்து பேராற்றலால், அந்த மகாகவியின் வாழ்க்கைச் சித்திரத்தை இதில் அடக்கிக் காட்டுகிறார். அவரது குடும்பம், கல்வி அறிவு, கவிகள், நாடகங்கள், கடிதங்கள், பிரசங்கங்கள், கட்டுரைகள் முதலிய அனைத்தினின்றும் ரசமான பாகங்களை சுவைததும்ப எடுத்துக் காட்டுகிறார். வங்க மொழியிலேயே தாகூரின் பாடல்களையும் கதைகளையும் சுவைத்திருப்பதால் தான், தாகூரைப்பற்றி இம்மாதிரி ஒரு அரிய நூலை எழுத முடிந்திருக்கிறது என்று சொல்லத் தேவையில்லை.

கவியரசர் தேசாபிமானம் மிக்குடையவர். பிற நாடுகளில் இந்தியர் இழிவாக நடத்தப்படுவதை அவர் சமயம் நேர்ந்தபோதெல்லாம் பலமாகக் கண்டித்திருக்கின்றார். நாட்டில் தேசியக் கனல் சுடர்விட்டெரிந்த போதெல்லாம் அவர் தமது கவிகளாலும் கட்டுரைகளாலும் நாட்டுமக்களின் வீரவுணர்ச்சியைத் தூண்டியிருக்கிறார். எதிர்ப்பையோ, கண்டனத்தையோ, வெளிநாட்டில் தமது செல்வாக்குக் குறையுமென்ற எண்ணத்தையோ அவர் சிறிதும் லட்சியம் செய்யவில்லை. நாட்டில் சுதேசி இயக்கம் வளர அவர் பேருதவி புரிந்திருக்கிறார். பன்முறை உலக சுற்றுப்பிரயாணம் நடத்தி இந்தியாவின் பெருமையைப் பரப்பி யிருக்கிறார். தாகூரின் லட்சியமென்ன? அவர் விசுவபாரதி அமைத்ததன் நோக்கமென்ன? அவரது அந்திய வாழ்வு, அவருக்கு நாடும் உலகமும் காட்டிய மரியாதை, நோபெல் பரிசுபெற்ற சிறப்பு முதலிய சகல விவரங்களும் இந்நூலில் விளக்கப்படுகின்றன.

தமிழர் ஒவ்வொருவரும் படிக்கவேண்டிய நூல். தாகூர் கையெழுத்துக் கொண்ட உருவப்படம் முகப்பிலும், அவரது மனைவி ஸ்ரீமதி மிருணாளினி தேவியின் படம், தாகூரும் காந்தி அடிகளும் சந்தித்ததை விளக்கும் படம் இவை உள்ளிலும் சேர்க்கப்பட்டிருக்கின்றன. மீவார் திவான் ஸர் டி. விஜயராகவாச்சாரியார் இதற்கு முன்னுரை வழங்கியிருக்கின்றார்.

"நான் இந்நூலைப் படித்து மிக மிக ரசித்தேன். ஆங்கிலம், வங்காளம் தெரியாத தமிழ்நாட்டினருக்கு இந்நூல் தாகூரின் அருட் புலமையை நன்கு விளக்கும்" என்று அவர் கூறுகிறார். தாகூர் படம் பொறிக்கப் பெற்ற அழகிய மேலட்டையுடன் நூல் மிளிர்கிறது. உயரிய பதிப்பு.

இந்தியாவில் வருஷந்தோறும் 2 கோடி ரூபா மதிப்புள்ள புகையிலை செலவாகிறது.

## பகலில் ஓய்வும் இல்லை இரவில் தூக்கமு மில்லை

கடுமையான நரம்பு வீக்கத்தால் அவதிப்பட்ட மாது முழுக் குணம் அடைந்து விட்டாள.

தன்னைப் போல் அவதிப்படுபவர்களுக்கு உபயோகமாக விருக்க, ஒரு நன்றியுள்ள மாது இம்மாதிரி எழுதுகிறாள்:—

சென்ற கோடை நாட்களில் காலில் நரம்பு வீக்கத்தால் பகலில் ஓய்வு எடுக்கவும் முடியாமல் இரவில் தூங்கவும் முடியாமல் கஷ்டப்பட்டேன். வேதனையைப் பற்றி சொல்லவே வேண்டாம். பல மருந்துகள் சாப்பிட்டும் குணப்படவில்லை. குருஷனை சாப்பிடும்படி சிலர் சொன்னதின் பேரில், ஒரு பாட்டில் வாங்கிச் சாப்பிட்டேன், உடனே குணம் தட்டியது. யோசனை சொன்னவர்க்கு என்றும் நன்றியுடையவளாவேன். இப்போது பூராவும் குணம் அடைந்து விட்டேன். இரவில் அயர்ந்து தூங்குகிறேன்.

(Mrs) H. C. (காரச்சி)

கூரிய யூரிக் ஆஸிட் ஸ்படிகங்கள் உட்தங்கி நரம்புகளைத் தாக்கி குத்து வலியைக் கிளப்புவதால் நரம்பு வீக்கம் உண்டாகின்றது. குருஷன் சால்ட் இந்த ஸ்படிகங்களை கரைத்து மூத்திரக்காய் வழியே வெளியேற்றி விடுகிறது. எல்லா ஸ்டோர்களிலும் கெமிஸ்டுகளிடமும் குருஷன் சால்ட் கிடைக்கும்.

தேயிலைப் பானத்தில் சேர்த்து அருந்துங்கள் பானத்தின் ருசி கெடாது.

KRUSCHEN SALTS

## ஸ்ரீ ராம நிலையம் டிராவலர்ஸ் ரூம்கள்

102, ராமசாமி நாயக்கர் தெரு, காரைக்குடி.

(காங்கிரஸ் மாளிகைக்கு பக்கம்).

கல்லுக்கட்டிக்கு சமீபத்தில் நல்ல தண்ணீர், சுகாதாரம், பந்தோபஸ்து, கார், வண்டிகள் நிறுத்த பிரத்தியேக இட வசதிகளுடன் ரூம்கள் வாடகைக்குக் கிடைக்கும்.

உ. அ. அரு. அருணாசலம் செட்டியார்,
வைர வியாபாரம், காரைக்குடி.

## ஒரு ஸ்திரீயினுடைய அழகிய சிகரம் அவளுடைய கூந்தலே!

கூந்தலானது அழகை அதிகப்படுத்தவதோடு உடலின் மெல்லிய பாகங்களையும் பாதுகாக்கிறது. தேகத்திலுள்ள பலஹீனமான பாகங்களுள் தலையின் பின்புறமொன்று. உஷ்ண மண்டலத்தில் வசிப்போர் அவற்றைப் பாதுகாப்பது மிக அவசியம். இதற்கென்று கடவுள் அளித்த அபரிமிதமான பாதுகாப்பை, வெட்டுவதும், குறைப்பதும், சுருட்டுவதும் புத்திசாலித்தனமா? உங்கள் கூந்தலை வளருங்கள். அதை அடர்த்தியாகவும் பளபளப்பாகவும் இருக்கச் செய்யுங்கள்.

காமினியா ஆயில்

மயிர்க் கால்களைப் பராமரித்து, இள மயிர்களுக்கு வலுவூட்டி, ஏற்கனவே உள்ள கூந்தலுக்கு புத்துயிர் அளிக்கின்றது.

பாட்டில் ஒன்றுக்கு விலை ரூ 1, 3 ரூபாட்டில்களுக்கு விலை ரூ 2-10-0 வி.பி. சார்ஜ் வேறு. அரையணா ஸ்டாம்பு அனுப்பினால் சாம்பிள் இனாமாக அளிக்கப்படும்.

காமினியா ஆயில் (ரிஜிஸ்டர்ட்)

KAMINIA OIL

ஸோல் ஏஜண்டுகள்:—
ஆங்கிலோ இந்தியன் டிரக் அன் கெமிகல் கம்பெனி, பம்பாய். (2)

THE ANGLO-INDIAN DRUG AND CHEMICAL CO

## நோட்டீஸ்

மதுரையிலிருக்கும்
இராமநாதபுரம் அபிஷியல்
ரிஸீவர் கோர்ட்டில்
1935-ஞூத்திய I. P. No. 8.
(O. R. R.)

1932-ஞூத்திய I. P. No 37.
சிவகெங்கை சப் கோர்ட்டு

திருப்பத்தூர் தாலூகா கண்டரமாணிக்கத்தில் இருக்கும் முத்துக்கருப்பன் செட்டியார் என்ற வெள்ளையன் செட்டியார் மகன் P. M. லெக்ஷ்மணன் செட்டியார். } இன்சால்வெண்டு.

தேவகோட்டையி லிருக்கும் லெக்ஷ்மணன் செட்டியார் குமாரர் A. RM. AL. A. அருணாசலம் செட்டியார் வகையறா. } கிரிடிட்டர்கள்.

1920-ஞூத்திய 5-வது ஆக்டு 61 செக்ஷன்படி இதுவரையில் தங்கள் கடனை ரூஜுப்படுத்தாத ஷை இன்ஸால்வெண்டு மனுதாரருடைய கடன்காரர்கள் நாளது 1942ஞூ செப்டம்பர் மீ 8-உக்குள் அப்படிச் செய்யாதவரையில் அவர்களுடைய கடனைப் பாராட்டாமல் கடைசியாக விதாசாரம் பிரித்துக் கொடுக்கப்படும்.

M. S. பார்த்தசாரதி,
அபிஷியல் ரிஸீவர்.

மதுரை
1-8-1942



# காரைக்குடி நகர சபை

## 1941-42ம் வருடத்திய நிர்வாக அறிக்கை

★

காரைக்குடி முனிசிபாலிடியின் 1941-42-ம் வருட நிர்வாக அறிக்கை வெளியாகியிருக்கிறது. அதில் கண்டுள்ள முக்கிய விஷயங்கள் வருமாறு:—

முனிஸிபல் நகரின் விஸ்தீரணம் சுமார் 6½ சதுர மைல். 1941-ம் வருடம் எடுக்கப்பட்ட ஜனகணிதப்படி ஜனத்தொகை 29,101. இப்போது 31,000-க்குக் குறையாமலிருக்குமென்று மதிப்பிடப்படுகிறது. பிரஸ்தாப வருடத்தில் 39 கூட்டங்கள் நடைபெற்றன. அவற்றில் அவசரமாகக் கூட்டப் பெற்றவை 10. கூட்டங்களுக்கு ஆஜரான அங்கத்தினர்களின் சராசரித் தொகை 47.2 சத விகிதம். இவ்வருஷம் சபையின் முன்பு பைசலுக்காக வைக்கப்பட்ட 921 விஷயங்களில் 919 பைசல் செய்யப் பெற்றன. பொது இலாகா, வசூல் இலாகா, சிப்பந்திகளின் சம்பளம் வகையறாச் செலவு 6.6 சத விகிதம்; சென்ற வருடம் 6 சத விகிதம்.

### ரோடுகள்

நகரசபையின் அதிகார எல்லைக் குள்பட்ட ரோடுகளின் மொத்த நீளம் சுமார் 36½ மைல்; இவற்றில் 10¾ மைல் நீள ரோடுகளுக்குத் தார் பூசப்பட்டிருக்கிறது. மராமத்து வேலைகளுக்காக மொத்தம் ரூ. 32,221 செலவிடப் பெற்றது. மிருக வாகனதிகளின் வரிமூலம் ரூ 3228ம், பார வண்டிகளின் வரிமூலம் ரூ 1606ம், மோட்டார் வரிவிதிப்புச் சட்டப்படி ரூ 64,048ம் வருமானம் கிடைத்திருக்கின்றன.

### விளக்குகள்

31—3—42ல் மொத்தம் 887 மின்சார விளக்குகள் இருந்தன. முன் வருடம் இருந்தவை 907. வீதி விளக்குகளின் பராமரிப்புக்காக ஏற்பட்ட செலவு ரூ 24,711-9-0; முன் வருஷம் ரூ 23,811. விளக்கு வரியாக ரூ 25,010 கிடைத்திருக்கிறது. முனிசிபல் எல்லைக்குள் மின்சார சக்தி விநியோகிக்கும் உரிமையை எலக்ட்ரிக் சப்ளைக் கார்ப்பரேஷனிடமிருந்து விலக்கு வாங்குவதென்ற உத்தேசம் பயன்படவில்லை. இது விஷயத்தில் தாங்கள் தலையிட முடியாதென்று சர்க்கார் தெரிவித்து விட்டார்கள்.

### கல்வி

பிரஸ்தாப வருஷத்தில் 13 ஆரம்பப் பள்ளிக்கூடங்கள் இருந்தன. அங்கீகரிக்கப்பட்ட பிரைவேட் ஆரம்பப் பள்ளிக்கூடங்கள் 9 இருந்தன. 1941-ம் வருட ஜன கணிதப்படி பள்ளி செல்லும் வயதுடைய குழந்தைகளின் தொகை ஆண் 1827, பெண் 1885, மொத்தம் 3712. சகல பள்ளிக்கூடங்களிலும் படித்துவந்த ஆண்கள் 1015, பெண்கள் 687, மொத்தம் 1702. கற்காத பிள்ளைகள் மொத்தம் 2010. முனிசிபல் பள்ளிக்கூடங்களில் படித்த பிள்ளைகளின் தொகை 30-3-41-ல் 1248, 31-3-42 ல் 1324. பள்ளி செல்லும் வயதுடைய குழந்தைகளில் ஆண்களில் 55·6 சத விகிதம் பேரும், பெண்களில் 36·5 சத விகிதம் பேரும் படித்து வந்தனர். முன் வருஷம் முனிசிபல் பள்ளிகளில் 40 உபாத்தியாயர்கள் இருந்தனர். பிரஸ்தாப வருஷத்தில் 43 பேர். கல்வி வரி விதிக்கப்படவில்லை. ஆரம்பக் கல்வி விஷயத்தில் பிரஸ்தாப வருடத்தில் ஏற்பட்ட செலவு ரூ. 16,126; பிள்ளையொன்றுக்குச் செலவு ரூ. 10-6-0 வீதம் ஆகிறது. முன் வருடம் ஏற்பட்ட விகிதம் ரூ. 9-11-6.

### சுகாதாரம்

பிரஸ்தாப வருஷம் முனிசிபல் ஆஸ்பத்திரியில் சிகிச்சை பெற்ற நோயாளிகளின் எண்ணிக்கை 24,952; முன் வருஷம் 24,349. மாஜிக் லாண்டர்ன் காட்சியுடன் 181 பிரசங்கங்களும், 56 சாதாரணப் பிரசங்கங்களும் 115 சம்பாஷணைகளும், 70 சினிமாக் காட்சிகளும் பிரஸ்தாப வருஷத்தில் செய்யப்பட்ட சுகாதாரப் பிரசார வேலையின் முக்கிய அம்சங்கள்.

சுகாதாரப் பாதுகாப்புக்காக இவ்வருடம் ஏற்பட்ட செலவு ரூ 28,327; முன் வருஷம் ரூ 28,457. கக்கூஸ் வரிவசூல் ரூ 10,872 (முன் வருடம் ரூ 10,530) நகரிலுள்ள மொத்த வீடுகள் 4938; இவற்றில் 1643 மட்டும் கக்கூஸ்கள் அமைக்கப்பட்டவை; முன் வருடம் 1569 வீடுகளில் மட்டும் கக்கூஸ் இருந்தது. பொதுக் கக்கூஸ்கள் அமைக்க ரூ 891 செலவிடப்பட்டது. கொசு ஒழிப்புக்காக ரூ 3227 செலவிடப்பட்டது.

### ஜனன மரணம்

பிரஸ்தாப வருஷத்தில் மொத்தம் 1055 ஜனனங்கள் பதிவு செய்யப்பட்டன. முன் வருஷம் 918. இது ஜனத்தொகையில் 1000-க்கு 33·64 விகிதமாகிறது; முன் வருஷம் 42·36 விகிதமிருந்தது. தாய் முறை சிசு சம்ரட்சணை சாலைகளைப் பராமரிப்பதற்காக பிரஸ்தாப வருஷம் ஏற்பட்ட செலவு ரூ. 3963; முன் வருஷம் ஏற்பட்டது ரூ. 4017. பிரஸ்தாப வருஷத்தில் 657 மரணங்கள் பதிவு செய்யப்பட்டன. இது ஜனத் தொகையில் 1000 க்கு 22·57 வீதமாகிறது; முன் வருஷம் 30·62 வீதமாயிருந்தது.

### நகர அபிவிருத்தி

ரயில்வே ஸ்டேஷன் பகுதி விஸ்தீரணத்தைப் பொறுத்த நகர் அமைப்புத் திட்டத்தின் முதற்பாகம் சர்க்கார் அங்கீகாரம் பெற்றிருக்கிறது. ஷை இடத்தில் ரஸ்தாக்கள், கட்டிட மனைகள், வியாபார ஸ்தாபனங்கள் கட்டுவதற்காகத் தேவையான நிலங்களை ஆர்ஜிதம் செய்வதற்காக ரூ 73,000 சர்க்காரிடம் கடன் கேட்டதில், 1942-43ம் வருட பட்ஜட்டில் இதற்குத் தொகை ஒதுக்கப்பட்டிருக்கிறது. நில ஆர்ஜித நடவடிக்கை எடுத்துக் கொள்ளப்பட்டிருக்கிறது.

### வரவு செலவு

வரிகள், வரிகள் அல்லாதவை ஆகிய இரண்டு வகைகளிலும் மொத்தம் டிமாண்டு ரூ 2,50,517; வருடக் கடைசி வசூலாகாமல் பாக்கியிருந்தது ரூ 29,876. பிரஸ்தாப வருடம் ஆரம்பக்கையிருப்பு ரூ 5501. மொத்த வருமானம் ரூ 265,661; மொத்தச் செலவு ரூ 229,267. வருடக் கடைசி கையிருப்பு 41,895. தண்ணீர் சப்ளைத் திட்டத்தை நிறைவேற்ற சர்க்காரிடமிருந்து ரூ 32700 கடனாக வாங்கப்பட்டது; ஆனால் தேவையான சாமான்கள் கிடைப்பது அரிதாயிருப்பதால், வேலை துவக்கப் படாமல் ஒத்திவைக்கப்பட்டது.

## காரைக்குடியில் பொதுக்கூட்டம்

அகில இந்திய கம்யூனிஸ்டுக் கட்சி காரியதரிசி பி. ஸி. ஜோஷி அறிக்கைக் கிணங்க 6-8-42ல் மாலை காரைக்குடி மணிக்கூண்டுக் கருகில் ஸ்ரீ எஸ். வி. ராமசாமி தலைமையில் ஓர் பொதுக்கூட்டம் நடைபெற்றது. அவ்வமயம் ஸ்ரீ பட்சிராஜன், ராம. கருப்பன் செட்டியார், கே. கன்னையா முதலியோர் தேசீய சர்க்காரின் அவசியத்தை வற்புறுத்திப் பேசினார்கள்.

## அத்தியாவசியமான வேலைகள் அவசரச் சட்டம்

அத்தியாவசியமான வேலைகள் நடத்துவது சம்பந்தமான அவசரச் சட்டத்தின் விதிகள் எதுவும் அமுலிலுள்ள மற்ற சட்டங்களின் கீழ் கட்டாய சேவை புரிய ஒருவர் அழைக்கப்படுவதைப் பாதிக்காது என்று 30-7-42ல் பிறப்பித்திருக்கும் அவசரச் சட்டம் ஒன்று கூறுகிறது. அத்தியாவசியமான வேலைகள் நடத்துவது சம்பந்தமான அவசரச் சட்டத்தின்படி ஒரு வேலையில் இருத்தப்பட்டவர் எவரும், யந்திர நுட்ப ஆட்கள் தேசீய ஊழிய அவசரச் சட்டம் போன்ற வேறொரு சட்டப்படி மற்றோரிடத்தில் இன்னொரு வேலை செய்யும்படி தன்னை நிர்ப்பந்திக்க முடியாது என்று எண்ணிக் கொள்ளக் கூடாது என்பதற்காகவே இந்த அவசரச் சட்டம் இந்திய சர்க்காரால் பிறப்பிக்கப்பட்டிருக்கிறது.

வள்ளுவர் குறள் முதல்
வங்க மொழிபெயர்ப்பு நூல்வரை
எல்லாத் தமிழ்ப் புத்தகங்களும்,
இங்கிலீஷ், ஹிந்தி புத்தகங்களும்

கிடைக்குமிடம்:—

செல்லப்பா அன் சன்ஸ்
கல்லுக்கட்டி :: காரைக்குடி

# மயூகன்

பிரபல நாவல் ஆசிரியர் பானர்ஜி எழுதியது.

வங்க மூலத்திலிருந்து அழகாய் மொழிபெயர்த்தவர்
த. நா. குமாரஸ்வாமி பி. ஏ.,

பேதர் வேயிட் காகிதம் அழகான பைண்ட்

ரூ. 1—8—0
(தபால் செலவு தனி.)

அல்லயன்ஸ் கம்பெனி, மயிலாப்பூர், சென்னை.
கிளை ஆபீஸ்: நியூ டவுன், காரைக்குடி.

இரவொடு இரவு இருமல் தொல்லை, நெஞ்சுவலி, இருமலுடன் இரத்தம் விழுதல், இவைகளை எம்.சாமி தாளக பஸ்பம் நிச்சயமாய்க் குணப் படுத்தும்

24 வேளை புட்டி 1க்கு ரூ-4— தபால் சார்ஜ் வேறு

மலையப்பசாமி வைத்தியசாலை பழனி S.I.

சுதேசி ஓடுகளில் சிறந்த
ராணி பவுன் ஓடுகளையும்
செங்கலில் சிறந்த
8" 9" மேஜை செங்கலையும்
வாங்குங்கள்.

NEW MODEL

விலை விபரம் நேரிலும் கடிதமூலமும்.

கிடைக்குமிடம்:-

மு. அ. ஓட்டு மில்,
[ஸ்தாபிதம்: 1928.] அமராவதிபுதூர்.

முனிசிபல் & செட்டிநாடு பாலெஸ் சப்ளையர்ஸ்.

மதுரை இராமநாதபுரம் சென்ட்ரல்
கோவாபரேடிவ் பாங்க் லிமிடெட், மதுரை,
காரைக்குடி பிராஞ்ச்.

5—8—42உ முதல் கீழ்க்கண்ட வட்டி விகிதப்படி டிபாசிட்டுகள் ஏற்றுக்கொள்ளப்படும்.

பிக்ஸட் டிபாசிட்டுகள்:

| | | |
|---|---|---|
| ஒரு வருஷம் | ... | 2 % |
| இரண்டு வருஷம் | .... | 2¼% |
| சேவிங்ஸ் கணக்கு | ... | 2 % |
| கரண்டு கணக்கு | ... | ½% |

பொதுவாக சகலவிதமான பாங்க் அலுவல்களும் நடத்தப்படும்.

S. ராமஸ்வாமி, ஏஜண்ட்.

## ஸ்தல ஸ்தாபனங்களை ஒடுக்க

மாகாண சர்க்கார்களுக்கு அதிகாரம்

இந்தியப் பாதுகாப்புச் சட்டப்படி இந்தியா சர்க்கார் பிறப்பித்துள்ள உத்தரவு மாகாண சர்க்கார்களுக்கு ஒரு புதிய அதிகாரத்தைக் கொடுக்கிறது. எந்த ஸ்தல ஸ்தாபனமாவது தனது பணத்தையோ, அதிகாரத்தையோ சிப்பந்திகளையோ பிரிட்டிஷ் இந்தியாவின் பாதுகாப்பு அல்லது பொது பந்தோபஸ்து, யுத்த முயற்சி இவைகளுக்கோ அல்லது சமூக வாழ்வுக்கு மூலாதாரமான சப்ளை முதலியவைகளுக்கோ விரோதமாக உபயோகித்தால், அந்த ஸ்தல ஸ்தாபனத்தை அவசியமான காலம் வரை ரத்து செய்ய இந்தப் புதிய அதிகாரம் மாகாண சர்க்கார்களுக்கு வசதியளிக்கிறது.

## ஸ்ரீ ஆத்மநாத திரிசாரணப் படை, மிதிலைப்பட்டி

"எங்கள் படையின் மூவாண்டு விழா ஆடி மீ 23ந் தேதி மாலை 5 மணிக்கு புதுக்கோட்டை ஸமஸ்தான உதவி சாரணக் கமிஷனர் ஜனாப் கான்பஹதூர் P. கலிபுல்லா ஸாஹேப் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. தலைவர் அவர்கள் தமது முன்னுரையில் நகரத்தார் சமூகத்தின் முன்னேற்றங் கருதிப் பேசினார்கள். அறிக்கையும் வாழ்த்துக் கடிதங்களும் சமர்ப்பிக்கப்பட்ட பின் திரிசாரணர்களுக்கு மூவாண்டுச் சின்னம் வழங்கப்பட்டது. பின்னர் புதுக்கோட்டை சமஸ்தான சாரண சங்கத்தின் ஆர்கனைஸிங் ஸெக்ரடரி ஸ்ரீ G. வேங்கடேசன் அவர்கள் 'சாரணியம்' என்பது பற்றிப் பேசுகையில் சாரணியத்தின் வளர்ச்சியையும் அதன் பத்து லக்ஷியங்களையும் விளக்கிக் கூறினார்கள். இரவு 10 மணிக்கு திரளான ஜனக் கூட்டத்தினிடையே திரிசாரணர்களின் திவட்டக் களியாட்டத்துடன் விழா இனிது நிறைவேறியது" என்று காரியதரிசி அறிவிக்கிறார்.

---

ஸோயா அவரை எண்ணெய், சோள எண்ணெய் முதலியவற்றிலிருந்து ரப்பர் தயாரிக்கச் செய்யப்பட்ட முயற்சி ஓரளவு பலனளித்திருப்பதாயும், தயாரான சரக்குக்கு ரப்பர் போன்ற மணமிருப்பதாயும் இல்லினாய் விவசாய இலாகாவைச் சேர்ந்த ரசாயன நிபுணர்கள் தெரிவித்திருக்கின்றனராம்.

## மலேரியா பெருவாரி நோய்

போன மலேரியா பெருவாரியின் போது ஹார்லிக்ஸை உணவாக்கிப் பார்க்க உபயோகித்துப் பார்த்ததில் வெகு திருப்திகரமான பயனடைந்தனர். ஜுர நோய்களில் முக்கியமாக தொந்தரவு கொடுப்பது ஆகார விஷயம் தான். ஜுர விஷயங்கள் உங்கள் நரம்புகளையும் தசை நார்களையும் தாக்கி உங்களை சோர்வடையச் செய்கிறது. கெட்டியான உணவுகளொன்றும் ஜீர்ணமாகா. இது போன்ற நிலைமையில் ஹார்லிக்ஸே தகுதியான ஆகாரமென்பது டாக்டர்களின் அபிப்பிராயம். அது 100-க்கு 100-ம் போஷாக்கு. எளிதில் ஜீர்ணமுமாகும். விரைவில் பலமும் வீரியமுமளித்து உடம்பை தேற்றுகிறது. ஒவ்வொரு வீட்டிலும் ஜுர பாதுகாப்பிற்காக ஹார்லிக்ஸ் அவசியம் இருக்க வேண்டும்.







## ஜெர்மனிக்கு பிரெஞ்சுத்தொழிலாளிகள்

ஜெர்மனிக்குப் போகத் தாங்களாகவே முன்வரும் பிரெஞ்சுத் தொழிலாளிகளின் எண்ணிக்கை உடனேயே அதிகரிக்காத பட்சத்தில் பிரஞ்சுப் பட்டறைகள் மூடப்படும் என்ற ஜெர்மன் அச்சுறுத்தலுக்கு லவால் ஆதரவு அளித்துக் கொண்டிருக்கிறார் என்று பிரெஞ்சு தேசியக் கமிட்டிக்குத் தகவல் கிடைத்துள்ளது. ஒத்துழைப்பு வேலைக்கென்று ஏற்படுத்தப்பட்டுள்ள கமிட்டிகள், ஒவ்வொரு பிரெஞ்சுக் கம்பெனியும் தன் தொழிலாளிகளில் ஒரு பகுதியினரை ஜெர்மனிக்கு அனுப்புகிறதா என்று கவனிக்க வேண்டும் என்று லவால் ஒரு கண்டிப்பான சுற்றறிக்கை அனுப்பியுள்ளார். உலோக வேலை அனுபவம் உள்ள தொழிலாளிகளுக்குப் பர்த்தியாகத்தான் யுத்தக் கைதிகளை விடுதலை செய்ய முடியும் என்று பிரெஞ்சு அதிகாரிகளுக்கு ஜெர்மானியர் தெரிவித்து விட்டனர். தொழிலாளிகள் அனுபவம் உள்ளவர்களா அல்லவா என்பதை ஜெர்மன் அதிகாரிகள் தாம் தீர்மானிப்பார்கள்.

---

செப்டம்பர் 3-ந்தேதியோடு யுத்தம் தொடங்கி மூன்று ஆண்டு பூர்த்தியாவதால், அன்று தேசிய பிரார்த்தனை தினமாகக் கொண்டாடும்படி மன்னர் வேண்டுகோள் விடுத்திருக்கிறார்.

## சென்னையில் உணவுப் பொருள் சப்ளை

உணவுப் பொருள்களை வாங்கிச் சேமித்து வைத்து, நகரின் பல பாகங்களிலும் சில்லறையாக விற்பதற்காக சர்க்காரிடம் 25 லட்ச ரூபாய் கடன் தரும்படி கேட்பதாகச் சென்னை கார்ப்பரேஷன் சமீபத்தில் ஓர் தீர்மானம் நிறைவேற்றி யிருக்கிறது.

## ஸ்ரீ ஆனே சுற்றுப்பிரயாணம்

இந்திய சர்க்கார் வெளிநாட்டிலாகா மெம்பர் கனம் எம்.எஸ். ஆனே இப்போது தென்னாட்டில் சுற்றுப்பிரயாணம் செய்து வருகிறார். ஆகஸ்டு 7உ அவர் மதுரைக்கு வந்தார். அன்று காலை அங்கு நடைபெற்ற பொதுக்கூட்டத்தில் பேசினார். பர்மாவிலிருந்து வந்த இந்தியர்களுடைய க்ஷேமாபிவிருத்தியைப்பற்றி சர்க்கார் தீவிரமாகக் கவனித்து வருவதாகக் குறிப்பிட்டார். ராமநாதபுரம் ஜில்லா சம்பந்தப்பட்ட வரையில் பர்மா, மலேயாவில் ஜனங்களுக்கு 70 கோடி ரூபாய் வரை நஷ்டமென்று ஸ்ரீ டி. வி. சீனிவாஸய்யங்கார் குறிப்பிட்டார். 9உ ஸ்ரீ ஆனே தனுஷ்கோடி வந்து விட்டு அங்கிருந்து தஞ்சை புறப்பட்டார்.

## ஸ்ரீ மீனாட்சி சுந்தரேஸ்வர வித்யாசாலை

மாணவர் சங்க ஆரம்ப விழா

காரைக்குடி ஸ்ரீ மீனாக்ஷி சுந்தரேஸ்வர வித்யாசாலையின் மாணவர் சங்க ஆரம்ப விழா 8-8-42 சனிக்கிழமை பிற்பகல் 4 மணிக்கு ஸ்கூல் ஹாலில் கூடியது. ஆசிரியர்களும் மாணவ, மாணவிகளும் குழுமியிருந்தனர். டாக்டர் சுப்ரமண்யம் அவர்கள் தலைமை வகித்தார். கடவுள் வாழ்த்து பாடப்பெற்றதும் சங்கத் தலைவர் திரு எஸ். ஸ்ரீனிவாசய்யங்கார் டாக்டர் சுப்ரமண்யம் அவர்களை மாணவர் சங்கத்தை ஆரம்பித்துத் தரும்படி கேட்டுக்கொண்டார். தலைவர் டாக்டர் சுப்ரமண்யம் அவர்கள் சங்கத்தை ஆரம்பித்து வைத்து மாணவர்களுக்கு நல்லுரை கூறினார். அவர் தமது உரையில் மாணவர்கள் தேசிய இயக்கத்தில் நேரடியாக இறங்கக் கூடாதென்றும், அதனால் அவர்கள் படிப்பு கெட்டு விடுமென்றும், எவ்வளவோ படித்தவர்கள் ஜெயிலுக்குப்போய் வெளிவந்த பிறகு பிழைப்புக்கு வழியில்லாமல் கஷ்டப்படுகிறார்கள் என்றும் அவர்களை ஆதரிக்க சமூகம் முன்வர வில்லையென்றும், ஆகவே மாணவர்கள் ஆசிரியர்களுக்கும் பெற்றோர்களுக்கும் கட்டுப்பட்டிருக்க வேண்டுமென்றும், ஆனால் அவர்கள் மனதில் மட்டும் தேசபக்தி குடிகொண்டிருக்க வேண்டும் என்றும், எந்த சாமானை வாங்கினாலும் இந்தியர்களால் செய்யப்படுகிற, இந்தியர்களால் விற்கப்படுகிற—விலை 4 அணா அதிகமாயிருந்தாலும் பரவாயில்லை—சாமான்களையே வாங்க வேண்டுமென்றும், இது விஷயத்தில் பிற தேசத்தவர்களை நாம் பின்பற்ற வேண்டுமென்றும், பணக்கார மாணவர்கள், சினிமா, ஹோட்டல் முதலிய அனாவசியமான செலவைக் குறைத்துக் கொண்டு அந்தப் பணத்தை ஏழை மாணவர்களுக்கு உபகாரச் சம்பளம் கொடுக்க வேண்டும் என்றும், மாணவர்கள், ஆசிரியர்களுக்கென ஒரு சஞ்சிகை ஆரம்பித்தல் நலம் எனவும், பிற ஹைஸ்கூல்களிலிருந்தும் மாணவர்களை வரவழைத்துவிவாதசங்கம்(Debating Society) நடத்துவதனால் பேச்சுவன்மை அதிகப்படலாமென்றும், எல்லோரும் ஹிந்தி கற்றுக்கொள்ள வேண்டுமென்றும், மாணவர்கள் சமூக சேவையில் பெரிதும் ஈடுபட வேண்டுமென்றும் ஆங்கிலத்தில் சுமார் ஒரு மணி நேரம் பேசினார்.

பிறகு சங்கத்தலைவர் திரு. ஸ்ரீனிவாசய்யங்கார் வந்தனோபசாரம் கூறக் கூட்டம் இனிது முடிந்தது.

## காரைக்குடி பாரதி கழகச் சட்ட சபை

17, 18-8-42உ திங்கள், செவ்வாய்க்கிழமைகளில் பிற்பகல் 3 மணி தொடங்கி 7 மணி வரை சபையின் நான்காவது கூட்டம் (மெ. கா. மெ. மெ. மெ.) அஸம்ப்ளி ஹாலில் நடைபெறும் என்று அறிவிக்கப்படுகிறது.

## காரைக்குடி இராமகிருஷ்ண விவேகானந்த சங்கம்

7-8-42 வெள்ளிக்கிழமை மாலை 5-30 மணிக்கு ஸ்ரீ ராம. சிதம்பரம் தலைமையில் தாகூர் விழா கொண்டாடப்பட்டது. ஸ்ரீ ராம. சிதம்பரமும் ஸ்ரீ அரு. சோமையாவும் தாகூரின் சேவைகளைப்பற்றி மிக விரிவாகபேசிய பின்னர் கூட்டம் இனிது நிறைவேறியது.

## புதுக்கோட்டை சமஸ்தான ராஜீய விசேஷ மகாநாடு

புதுக்கோட்டை சமஸ்தான மன்னருக்கு நேர்முக அரசாக்ஷி செய்யும் உரிமை அளிக்க வேண்டுமெனக் கேட்டுக் கொள்வதற்காக, நாளது ஆடி மீ 30உ (14-8-42) வெள்ளிக்கிழமை மாலை 5-மணி முதல் ஸ்ரீ S. விஸ்வநாதய்யர் அவர்கள் B. A., தலைமையில் புதுக்கோட்டை டவுன் ஹாலில் ஒரு விசேஷ மகாநாடு நடைபெறும். ஸ்ரீ வி. ஷண்முகம் செட்டியார் அவர்கள் வரவேற்புக் கழகத் தலைவர். ஸ்ரீ V. கிருஷ்ணமூர்த்தி ஐயர் M.A., B.L. அவர்கள் சமஸ்தானக் கொடியை ஏற்றுவார். ஸ்ரீ G. சுந்தரேசய்யர் அவர்கள் B.A., L.T., M.L.C., மகாநாட்டைத் திறந்து வைப்பார்.



## காந்திஜி திட்டத்துக்கு ஆதரவு

### காரியக் கமிட்டித் தீர்மானம் நிறைவேறியது

பம்பாயில் ஆகஸ்டு 5உ கூடிய காங்கிரஸ் காரியக்கமிட்டி, 1200 வார்த்தைகளடங்கிய ஒரு தீர்மானத்தை காங்கிரஸ் கமிட்டி முன் சமர்ப்பிப்பதற்காக நிறைவேற்றியது. மூன்று வாரங்களுக்கு முன்பு வார்தாவில் செய்யப்பட்ட தீர்மானத்துக்குப் பிறகு ஏற்பட்டுள்ள விளைவுகளை யொட்டி கமிட்டி தேசீயக் கோரிக்கையை மறுபடியும் விளக்கியிருக்கிறது. தீர்மானத்தின் முக்கிய பகுதிகள் வருமாறு:—

இன்று ஏற்பட்டுள்ள ஆபத்து காரணமாக இந்தியா சுயேச்சை பெறுவதும் பிரிட்டிஷ் ஆதிக்கம் ஒழிவதும் அவசியமாகிறது. இனி எவ்வித வாக்குறுதியோ உத்தரவாதமோ அளிப்பதாலும் பலனில்லை. இப்பொழுதே சுதந்திர ஒளி வீசத் தலைப்பட்டால்தான் மக்களிடையே ஊக்கமும் உற்சாகமும் பிறக்கும். ஆகையால், பிரிட்டிஷ் அதிகாரம் இந்தியாவிலிருந்து மறைய வேண்டுமென்ற கோரிக்கையை காங்கிரஸ் கமிட்டி மறுபடியும் பலமாக வற்புறுத்துகிறது. இந்தியாவை சுயேச்சை நாடாக அறிவித்தவுடனே தற்காலிக சர்க்கார் ஒன்று அமைக்கப்படும். சுயேச்சை இந்தியா நேசநாடுகளுடன் சேர்ந்து போரிடும். தற்காலிக சர்க்காரில் நாட்டிலுள்ள சகல பிரிவுகளும் பிரதிநிதித்வம் பெற்றிருக்கும். ஆயுத பலத்துடனும், அஹிம்சா சக்தியுடனும் இந்தியாவைப் பாதுகாப்பதும், அந்நிய ஆக்ரமிப்பை எதிர்ப்பதுமே அதன் வேலை. நேசநாடுகளையும் அது சேர்த்துக் கொள்ளும். இந்தத் தற்காலிக சர்க்கார் அரசியல் நிர்ணய சபை சம்பந்தமாக ஒரு திட்டம் வகுக்கும். எல்லாப் பிரிவுகளும் ஏற்கக் கூடிய வகையில் அரசியல் நிர்ணயசபை ஒரு அரசியலைத் தயாரிக்கும். இந்தியாவுக்கும் நேச நாடுகளுக்கும் இருக்க வேண்டிய எதிர்கால உறவை சகல சுயேச்சை நாடுகளின் பிரதிநிதிகளும் ஒன்று கூடி விவாதித்து முடிவு செய்வர்.

இந்தியா சுதந்திரம் பெறுவது அந்நிய ஆதிக்கத்திலிருக்கும் எல்லா ஆசிய நாடுகளின் சுதந்திரத்துக்கும் ஒரு அடையாளமாகவும் ஆரம்பமாகவும் இருக்கும். சீனா அல்லது ரஷ்யாவின் பாதுகாப்புக்கு எந்தவிதத்திலும் சங்கடம் உண்டுபண்ணக் கமிட்டி விரும்பவில்லை. நேசநாடுகளின் பாதுகாப்பு சக்தியைக் குலைக்கவும் விரும்ப வில்லை.

பிரிட்டனுக்கும் நேசநாடுகளுக்கும் காரியக் கமிட்டி விடுத்த விஞ்ஞாபனத்துக்கு இதுவரைப் பலனில்லை. ஆகவே இந்திய சுதந்திரத்தையும், சுயேச்சையையும் நிலைநாட்ட விரிவான முறையில் அஹிம்சாதர்மத்தை அடிப்படையாகக் கொண்டு பொதுஜனப் போராட்டத்தை ஆரம்பிக்கக் கமிட்டி அனுமதிக்கிறது. தலைமைப் பொறுப்பை ஏற்று நாட்டுமக்களுக்கு வழி காட்டும்படி கமிட்டி காந்திஜியைக் கேட்டுக்கொள்கிறது. காந்திஜி காட்டும் வழியை பின்பற்றி நடக்குமாறும், அவருடைய கட்டளைகளை நிறைவேற்று மாறும் கமிட்டி இந்திய மகாஜனங்களைக் கேட்டுக் கொள்கிறது. கட்டளை பிறக்க இடமில்லாமலோ, அல்லது அவை ஜனங்களிடம் சேராமலோ போய்விடலாம்; காங்கிரஸ் கமிட்டிகள் வேலை செய்ய முடியாமலும் போய்விடலாம். அம்மாதிரி நிலைமையில், ஒவ்வொருவரும் ஏற்கனவே பிறப்பிக்கப்பட்ட கட்டளைகளுக்கு உட்பட்டு நடக்க வேண்டும். சுதந்திரத்தைப் பெறுவதற்காக ஒவ்வொருவரும் தம் வழியைத் தாமே நிர்ணயித்துக் கொள்ள வேண்டும். இந்தியாவின் சுயேச்சைதான் போராட்டத்தின் முடிவு.

காரியக் கமிட்டியின் 7,8 தேதிக் கூட்டங்களில் மகாத்மா காந்தி தமது வேலைத் திட்டத்தை விளக்கிப் பேசினார்.

### காங்கிரஸ் கமிட்டி

அ. இ. காங்கிரஸ் கமிட்டி ஆகஸ்டு 7உ பிற்பகல் பம்பாயில் குவாலியா குளக்கரை மைதானத்தில் ஆரம்பமாயிற்று. சுமார் 250 அங்கத்தினர்களும் 10 ஆயிரம் விஸிட்டர்களும் வந்திருந்தனர். காங்கிரஸ் தலைவர் மௌலானா ஆஸாத் தமது முன்னுரையில், காங்கிரஸ் கோரிக்கையை விளக்கிப் பேசினார். இந்தியா சுயேச்சை சாஸனத்தில் பிரிட்டன் கையெழுத்திட்டு விட்டால், இந்தப் போரில் கலந்து உழைப்பதாகக் காங்கிரஸ் ஒரு ஒப்பந்தம் செய்துகொள்ளும் என்று அவர் கூறினார். அவருக்குப் பின் காந்திஜி பேசினார். "இன்றே, இப்போதே இந்தியாவுக்கு சுதந்தரம் வேண்டும்" என்று கூறி, இந்தியாவிலிருந்து பிரிட்டிஷ் அதிகாரம் மறைய வேண்டும் என்ற கோரிக்கையின் நியாயத்தை விளக்கினார். மனமொப்பாமல் தீர்மானத்தை ஆதரிக்கக் கூடாதென்றும் இன்று ஏற்பட்டுள்ள சந்தர்ப்பத்தை

(8-ம் பக்கம் பார்க்க)



## இண்டோ-பர்மா டிரேடிங் கார்பரேஷன் லிமிடெட்,

டிம்பர் மெர்சன்ட்ஸ் & கண்டிராக்டர்ஸ், காரைக்குடி.

23—3—37 முதல் 31—12—41 வரை கம்பெனியின் அபிவிருத்தி அறிக்கை.

| வருஷம் | மூலதனம் ரூ | தொழிலிலிருக்கும் மூலதனம் ரூ. அ. ப. | மொத்த விற்பனை ரூ. அ. ப. | மொத்த வருமானம் ரூ. அ. ப. | மொத்தச் சிலவு ரூ. அ. ப. |
|---|---|---|---|---|---|
| 1937 | 58,375 | 83,563-12—0 | 1,47,032-10—6 | 12,966—7—0 | 6,218—5—6 |
| 1938 | 60,750 | 1,97,030—7—3 | 2,23,528—1—8 | 18,183—4—5 | 12,383-10—0 |
| 1939 | 60,750 | 2,17,414—7—9 | 1,79,203—6—9 | 30,208-12—1 | 20,797—9—3 |
| 1940 | 69,500 | 2,48,450—2-10 | 3,16,756—7—9 | 43,907-14-11 | 33,824—2—6 |
| 1941 | 1,00,000 | 3,38,127—2—2 | 3,41,055-15—9 | 73,378-15—9 | 47,983—6—0 |

| வருஷம் | நிகர லாபம் ரூ. அ. ப. | டிவிடெண்டுத் தொகை ரூ. | டிவிடண்ட் விகிதம் | ரிசர்வ் பண்டு ரூ. | கண்டிஞ்ஜன்ட் ரிசர்வ் ரூ. |
|---|---|---|---|---|---|
| 1937 | 6,748—1—6 | 2,200 | 5 % | 1,500 | 500 |
| 1938 | 5,799-10—5 | 3,000 | 5 % | ... | 1,250 |
| 1939 | 9,411—2-10 | 3,050 | 5 % | 1,000 | 2,000 |
| 1940 | 10,083-12—5 | 3,250 | 5 % | 2,500 | 1,000 |
| 1941 | 25,395—9—9 | 4,500 | 6 % | 12,500 | 250 |

டைரக்டர்கள் ரிப்போர்ட்டில் கீழ்க்கண்டவாறு சிலாக்கியமாகக் குறிப்பிடப்பட்டிருக்கிறது.

ஷை கம்பெனியின் ஆரம்பகாலம் முதற்கொண்டு அதன் தொழில் (Business) சரியான முறையில் வளர்ச்சி யடைந்திருக்கிறது. அதுகாரணமாக ஷை கம்பெனி அதன் பங்குதார்களுக்கு லாபம் (Dividend) ஆரம்பமுதல் தவறாது பிரித்துக் கொடுத்திருக்கிற தென்று டைரக்டர்கள் தங்கள் ரிப்போர்ட்டில் சந்தோஷத்துடன் எழுதியிருக்கிறார்கள். ஷை கம்பெனிக்கு க்ஷேம நிதி (Reserve fund) யில் ரூபாய் 17,500-ம் கண்டிஞ்ஜெண்ட் (Contingent) நிதியில் ரூபாய் 5,000-ம் ஆக ரூபாய் 22,500 ஒதுக்கப்பட்டிருக்கிறது. 1942-ம் வருஷத்தில் தொழிலும் விரிவான முறையில் வளர்ச்சி யடைந்திருப்பது குறிப்பிடத் தக்கதாகும். மேலும் பிரஸ்தாப வருஷத்தில் தொழில் வளர்ச்சி மூலமாக நல்ல லாபமும் எதிர்பார்க்கப்படுகிறது. ஆகவே டைரக்டர்கள் கம்பெனியின் மீத முள்ள பங்குகளை பொது ஜனங்களுக்கு அசல் விலைக்கே (at Par) விற்க உத்தேசித்திருக்கிறார்கள். விருப்பமுள்ளவர்கள் தாங்கள் வாங்கும் ஷேர்களுக்குள்ள ஷேர் தொகையை கம்பெனி ஆபீஸிலோ அல்லது அதன் பாங்குகளிலோ செலுத்தலாம். இப்போதுள்ள பங்குதார்களின் (Share holders) விருப்பம் முதலில் கவனிக்கப்படும். பங்கு விற்பனைக் கணக்கும் 1942-ம் வருஷம் டிசம்பர் மீ 31உக்கு முன்பாக முடிவு செய்ய உத்தேசித்திருக்கிறார்கள்.

தவிர கம்பெனி அபிவிருத்திக்கு உதவி செய்த சில டைரக்டர்களுக்கு நன்றி செலுத்துகிறோம்.

P. S. மணி அய்யர்
துபாஷ்

S. N. VR. CT. சின்னன் செட்டியார்
மானேஜிங் டைரக்டர்.

குமரன்

காரைக்குடி
சித்திரபானு-ஞூ ஆடி-மீ 29-உ

## நகர சபை நிர்வாகம்

காரைக்குடி நகர சபையின் 1941-42ம் வருடத்திய நிர்வாக அறிக்கையினின்றும் சில முக்கிய விவரங்களை மற்றோரிடத்தில் வெளியிட்டிருக்கின்றோம். ரோடுகள் பராமரிப்பு முதலிய மராமத்து வேலைகள் செவ்வனே நடைபெற்றிருப்பது பாராட்டத் தக்கதாகும். விளக்கணைப்புத் திட்டத்தின் காரணமாக நகரிலுள்ள மின்சார விளக்குகளின் தொகை பிரஸ்தாப வருஷத்தில் சிறிது குறைந்திருக்கிறது. எனினும் விளக்குகள் பராமரிப்புச் செலவு முன் வருஷத்தை விட அதிகரித்திருக்கிறது. முனிசிபல் எல்லைக்குள் மின்சார சக்தியை விநியோகிப்பதற்கான உரிமையை எலக்டிரிக் சப்ளை கார்ப்பரேஷனிடமிருந்து விலைக்கு வாங்கிவிடக் கவுன்ஸில் திட்டம் போட்டது பயன்படவில்லை; சர்க்காரும் இதில் தலையிட முடியாதென்று சொல்லி விட்டனர். இந்தத் திட்டம் நிறைவேறினால் அது முனிசிபாலிடிக்கு ஒரு நல்ல நிரந்தரமான வருமானந் தரக் கூடிய அம்சமாக இருக்குமென்பதும், அந்த அதிகப்படி வருமானத்தைக் கொண்டு நகர நலத்துக்கு உரித்தான பல நிர்மாண வேலைகளைச் செய்யமுடியும் என்பதும் மறுக்க முடியாத உண்மைகள். எனவே, முனிசிபாலிடியாரின் உத்தேசம் பயன்படாமற் போனது பெரிதும் வருந்தற்குரிய விஷயம் என்பதிலையமில்லை. விளக்கணைப்பு நிபந்தனைகள் அமுலிலிருக்கும் காலத்தில் மின்சார சக்தி குறைவாகவே செலவாகு மாதலால் அதற்குரிய கட்டண விகிதத்தைக் குறைக்க வேண்டுமென்று எலக்டிரிக் சப்ளைக் கார்ப்பரேஷனிடம் கேட்டுக் கொண்டிருப்பதாகத் தெரிகிறது. கவுன்ஸிலின் இந்தக் கோரிக்கை நியாயமானதே. இதில் மீதமாகும் தொகையை, விளக்குகள் இல்லாத இடங்களில் புதிதாக விளக்குகள் போடுவதற்கு உபயோகிக்க வேண்டுமென்று முனிசிபாலிடியாரைக் கேட்டுக் கொள்ளுகின்றோம்.

ஆரம்பக் கல்வி விஷயத்தில் நகர சபை சமீப காலத்தில் அதிக சிரத்தை யெடுத்து வருகிறது. பதின்மூன்று பள்ளிக்கூடங்கள் நகர சபையால் நடத்தப்படுகின்றன. இவை தவிர, பிரைவேட் பள்ளிக்கூடங்களாக ஒன்பது இருந்தன. எல்லாப் பள்ளிக்கூடங்களிலுமாகச் சேர்ந்து மொத்தம் 1702 பிள்ளைகளே பிரஸ்தாப வருஷத்தில் படித்திருக்கின்றனர். ஆனால், 1941-ம் வருஷ ஜன கணிதப்படி பள்ளி செல்லும் வயதுடைய பிள்ளைகளின் தொகை 3712 ஆகும். இன்னும் பள்ளி செல்லாதிருப்பவர் தொகை 2010 ஆகிறது. பள்ளி செல்லும் வயதுடைய பிள்ளைகளில் நேர் பகுதிப் பேர்கூட படிக்கவில்லை யென்பது பெரிதும் வருத்தந்தரும் செய்தியாகும். இந்த நிலைமை அதிவிரைவில் மாறி, படியாதவர் தொகை மிகக் குறைந்தபட்ச அளவுக்கு வந்து விடும்படி செய்ய நகர சபையார் முயற்சி யெடுத்துக்கொள்வார்கள் என்று நம்புகின்றோம். பெண் கல்வியை மட்டும் கவனித்தால், அது மிகவும் மோசமான நிலையிலிருக்கிறது. பள்ளி செல்லும் வயதுடைய பெண்கள் 1885 பேரில் பிரஸ்தாப வருஷம் படித்தவர் தொகை 687 தான்; 100-க்கு சுமார் 64 பெண்கள் படிக்கவேயில்லை. முனிசிபாலிடியார் சுகாதாரப் பிரசாரத்தைப் போன்று, கல்விப் பிரசாரத்துக்கும் ஏற்பாடு செய்தால் இந்தக் குறையை எளிதில் நீக்கிவிடலாம். இங்குள்ள சங்கங்கள் இத்துறையில் நகர சபைக்கு அதிக உதவி செய்ய இடமுண்டு.

நகர சுகாதாரத்தையும், ஆரோக்கியத்தையும் பாதுகாப்பது நகர சபையின் முக்கியமான வேலைகளில் ஒன்றாகும். இத்துறையில் பிரஸ்தாப வருஷத்தில் நம் நகர சபை குறிப்பிடத் தக்க கவனம் செலுத்தி யிருக்கின்றதென்பது அறிக்கையிலிருந்து நன்கு புலனாகின்றது. இவ்வருஷம் முனிசிபல் ஆஸ்பத்திரியைப் பராமரிக்க ரூ. 5865 செலவாகியிருக்கிறது. அதில் சிகிச்சை பெற்றவர் தொகை 25,000. மற்றொரு பிரைவேட் மருத்துவசாலைக்கு ரூபாய் 400 உதவித் தொகையாக அளிக்கப்பட்டிருக்கிறது. நாகநாதபுரத்தில் ஒரு முனிசிபல் கிளை ஆஸ்பத்திரி திறக்கத் தீர்மானிக்கப்பட்டிருப்பதும் இங்கு குறிப்பிடத் தக்கதாகும்.

இந்நகரிலுள்ள வீடுகளின் மொத்த எண்ணிக்கை 4938; ஆனால் 1643 வீடுகளில்தான் கக்கூஸ்கள் அமைக்கப்பட்டிருக்கின்றன. சுகாதாரச் சட்டத்தின்படி கண்டிப்பான நடவடிக்கை யெடுக்கப்பட்டதாகக் குறிப்பிடப்பட்டிருக்கிறது. எனினும், கக்கூஸ் அமைக்கப்படாத வீடுகளே அதிகமாக இருக்கின்றன. வீடுகளில் கக்கூஸ் அமைப்பதின் அவசியத்தை ஜனங்கள் நன்கு உணரும்படி செய்ய வேண்டும். பொது ஜனங்களும் இவ்விஷயத்தில் சுகாதார இலாகாவுடன் ஒத்துழைப்பது அவசியமாகும். இந்நகரிலிருக்கும் பொதுக் கக்கூஸ்கள் மிகச் சில தான். அவை சரியாக உபயோகப்பட வில்லை. காரணம், தண்ணீர் வசதியின்மையும், அடிக்கடி சுத்தம் செய்யப்படாமையுமேயாகும். இந்தக் குறைபாட்டை நீக்கி அவை நன்கு உபயோகப்படும்படியாகச் செய்ய சுகாதார இலாகா முற்படவேண்டியது அவசியமாகுமென்று சொல்ல விரும்புகிறோம்.

பிரஸ்தாப வருடத்தில் சுகாதாரப் பிரசாரம் நல்ல முறையில் நடைபெற்றிருக்கிறது. நோய்த் தடை முறைகளும் சரியானபடி கையாளப்பட்டிருக்கின்றன. இவற்றின் நேரடியான பலனை மரண விகிதத்தினின்றும் தெரிந்து கொள்ளலாம். முந்தின வருஷம் மரண விகிதம் 1000க்குச் சுமார் 31 ஆக இருந்தது பிரஸ்தாப வருடத்தில் சுமார் 23 ஆகக் குறைந்திருக்கிறது. இது முனிசிபல் நிர்வாகத்தில் பெரிதும் பாராட்டுதற்குரிய அம்சமாகும்.

தண்ணீர் சப்ளைத் திட்டத்தை நிறைவேற்ற சர்க்காரிடமிருந்து ரூ. 32,700 கடனாகக் கிடைத்தும், தேவையான சாமான்கள் கிடைக்காததால், திட்டத்தைத் துவக்க முடியாமலிருப்பது பெரிதும் வருந்தத் தக்கதாகும்.

மொத்தத்தில் பிரஸ்தாப வருடத்தில் நகர சபை நிர்வாகம் நகர மக்களுக்கு நன்கு பயன்படத் தக்க வண்ணம் நடைபெற்றிருக்கிறதென்று சொல்லலாம்.

### பத்திரிகாசிரியர் கமிட்டிக் கூட்டம்

பத்திரிகாசிரியர் மகா நாட்டு நிர்வாகக் கமிட்டிக் கூட்டம், தற்போது ஏற்பட்டுள்ள நிலைமையைப் பற்றிப் பரிசீலனை செய்ய ஆகஸ்டு 17உ டில்லியில் கூடுகிறது.

### இந்தியாவில் ரூஸ்வெல்ட் பிரதிநிதி

பிரசிடெண்டு ரூஸ்வெல்டின் நிர்வாக உத்தியோகஸ்தர் மிஸ்டர் லாட்லின் கரி புது டில்லி வந்து சேர்ந்திருக்கிறார்.

## காந்திஜியை லண்டனுக்கு அழைக்க

### ஒரு பாதிரியின் யோசனை

சக்கரவர்த்தி யென்ற முறையில் இந்தியப் பிரச்னையில் தலையிடும்படியும் மகாத்மாவை லண்டனுக்கு அழைக்குமாறும் மன்னருக்கு யோசனை கூறும்படி டாக்டர் பெல்டன் எனும் லண்டனிலுள்ள ஒரு பிரார்த்தனை ஸ்தலத்தின் மாஜி குரு காண்டர்பரி ஆர்ச் பிஷப்புக்குத் தந்தி அடித்திருக்கிறார்.

### காமன்ஸ் சபையைக் கூட்ட

இந்திய நிலைமையைப்பற்றி விவாதிக்க, பார்லிமெண்டைக் கூட்டுமாறு சுயேச்சைத் தொழிற்கட்சி மெம்பர் மிஸ்டர் ஜேம்ஸ் மாக்ஸ்டன் காமன்ஸ் சபைத் தலைவருக்கு ஒரு வேண்டுகோள் விடுத்திருக்கிறார். ஆனால், அவ்வாறு பார்லிமெண்ட் கூட்டப்படமாட்டாதென்று ராய்ட்டர் நிருபர் கருதுகிறார்.

## காரைக்குடியில் கடையடைப்பு

சென்ற ஞாயிற்றுக்கிழமை முழுமையும் நகரிலுள்ள கடைகள், தொழிற்சாலைகள், சினிமாக்கள், அச்சுக்கூடங்கள் எல்லாம் மூடப்பட்டிருந்தன.

அன்று மாலை காந்தி சதுக்கத்தில் ஓர் பொதுக்கூட்டம் கூடியது. ஸ்ரீமான்கள் டாக்டர் சுப்பிரமணியம், சா. கணேசன், உன்னிகிருஷ்ணன் முதலிய பலர் பேசினர். திங்கள், செவ்வாய்க்கிழமைகளிலும் மாலையில் அங்கு பொதுக்கூட்டங்கள் நடைபெற்றன. ஸ்ரீ சா. கணேசன் காந்திஜியின் திட்டத்தை விளக்கிப் பேசினார்.

### தடியடிப் பிரயோகம்

செவ்வாய்க்கிழமை கூட்டம் முடிந்ததும் ஒரு பகுதி ஜனங்கள் முக்கிய வீதிகளின் வழியே ஊர்வலமாகச் சென்றனர். சிலர் மதராஸ் கபே முன்பு கூடி ஆர்ப்பாட்டஞ் செய்ததாயும் அதன் மேல் போலீசார் வந்து தடியடிப் பிரயோகம் செய்ததாயும் தெரிகிறது.

### மாணவர் ஊர்வலம்

நேற்று புதன்கிழமை காலை ஸ்ரீ மீனாட்சி சுந்தரேஸ்வரர் வித்தியாசாலை மாணவர் பள்ளிக்கூடம் செல்லவில்லை. ஹைஸ்கூல் வாசலில் கூடி அங்கிருந்து நகரின் முக்கிய வீதிகளின் வழியே ஊர்வலமாகச் சென்று பிரிந்தனர். அதுசமயம் வியாபாரிகள் தங்கள் கடைகளைச் சிறிது நேரம் மூட நேர்ந்தது. மாணவர்களுடன் கூட்டம் சேராதபடி போலீஸார் வந்து தடுத்தனர். ரிசர்வ் போலீஸார் முக்கிய வீதிகளின் வழியே பவனி வந்தனர். போலீஸ் அதிகாரிகளுடன் தேவகோட்டை சப் கலெக்டரும் டிப்டி சூப்ரண்டும் வந்திருந்தார்கள்.

### தடை உத்தரவு

நேற்று முதல் ஒரு மாத காலத்துக்குக் காரைக்குடியில் பொதுக்கூட்டங்கள் கூட்டக் கூடாதென்று திருப்பத்தூர் தாலூகா மாஜிஸ்திரேட் தடை உத்தரவு பிறப்பித்திருக்கிறார். இது நேற்று காலை தமுக்கு மூலம் அறிவிக்கப்பட்டது.

### துப்பாக்கிப் பிரயோகம்

நேற்று புதன்கிழமை மாலை தடையுத்தரவை மீறி காந்தி சதுக்கத்தைச் சுற்றித் திரளான மக்கள் கூடியிருந்தனர். போலீஸார் கலைந்துபோகும்படி சொன்னார்கள். துப்பாக்கிப் பிரயோகமும் நடைபெற்றதாகத் தெரிகிறது. எனினும் இரவு 9 மணிவரை ஜனங்கள் கலையவில்லை.

### திரு. சொக்கலிங்கம் செட்டியார் கைது

காரைக்குடி நகரக்காங்கிரஸ் கமிட்டியின் மாஜித் தலைவர் ஸ்ரீ ஆரு. ஆ. ராம. சொக்கலிங்கஞ் செட்டியார் ஆகஸ்டு 9-உ மாலை அவரது வீட்டில் போலீஸாரால் கைது செய்யப்பட்டு வேலூருக்கு அழைத்துச் செல்லப்பட்டார்.

### சீன சப்ளை

சீனாவுக்கு முன்பு பர்மா ரஸ்தா மூலம் கிடைத்து வந்த சப்ளையில் பத்திலொரு பங்குதான் இப்போது மற்ற எல்லா மார்க்கங்கள் மூலமும் கிடைத்து வருகின்றதாம்.

## "ராஜாஜியே சரியான மனிதர்"

### ஸர் பிரடரிக் ஒயிட் கருத்து

இந்திய சட்ட சபையின் மாஜித் தலைவரான ஸர் பிரடரிக் ஒயிட் லண்டனில் ராய்ட்டர் நிருபருக்குப் பேட்டியளிக்கும்போது, இந்தியாவுக்கும் பிரிட்டனுக்கும் சமரச ஒப்பந்தத்திற்கான முயற்சி செய்ய ஸ்ரீ ராஜகோபாலாச்சாரியே சரியான மனிதர் என்று சொன்னார்.

### "கார்டியன்" யோசனை

"இந்தியாவில் ஏற்பட்டுள்ள தகராறால் அச்சுநாடுகளுக்கு மிக்க அனுகூலமும், நேசக் கட்சிக்கு மிக்க தீங்கும் விளையுமுன் அத்தகராறைத் தீர்ப்பதற்கான விவேகம் இந்தியாவில் இருக்க வேண்டும். காங்கிரசில் அவ்விவேகம் இல்லையாகில், நாமும் இந்தியாவிலுள்ள மற்றவர்களும் அத்தகைய விவேகம் காட்ட வேண்டியது அவசியம். இந்திய மக்கள் நமது நண்பர்கள். நமது கூட்டாளிகளாக இருக்கவே விரும்புகிறோம். இதில் நமது கவுரவ உணர்ச்சியாலோ, காங்கிரஸ் மீதுள்ள கோபத்தாலோ சமரச முயற்சிக்கு உதவாமலிருந்து விடக்கூடாது" என்று "மான்செஸ்டர் கார்டியன்" ஒரு தலையங்கத்தில் எழுதியிருக்கிறது.

### அமெரிக்கருக்கு வேண்டுகோள்

#### காந்திஜியின் "ஹரிஜன்" கட்டுரை

"ஹரிஜன்" பத்திரிகையில் மகாத்மா ஒரு கட்டுரை மூலம் அமெரிக்கருக்கு ஒரு வேண்டுகோள் விடுத்திருக்கிறார். சுயேச்சை இந்தியாவினால்தான் உலகில் சமாதானம் ஏற்பட்டு மனித சமூகத்துக்குச் சுதந்திரம் கிடைக்குமென்று அதில் எடுத்துக் காட்டியிருக்கிறார். அமெரிக்காவில் நடந்து வரும் பொய்ப் பிரசாரத்தையும் அவர் மறுத்திருக்கிறார்.

### கவர்னரின் ஆலோசகர்

சென்னை சர்க்கார் பிரதம காரியதரிசி ஸ்ரீ எஸ். வி. ராமமூர்த்தி கவர்னரின் ஆலோசகராக நியமிக்கப் பெற்றிருக்கிறார்.

### 'ஆதரிக்க வேண்டாம்'

ஹிந்துக்கள் காங்கிரஸ் தீர்மானத்துக்கு ஆதரவளிக்க வேண்டாமென்று இந்து மகாசபைத் தலைவர் ஸ்ரீ சவர்க்கார் ஒரு அறிக்கை வெளியிட்டிருக்கிறார்.

### இந்தியாவை ஜப்பான் தாக்குமா?

இந்தியாவைத் தாக்க ஜப்பானிடம் அவ்வளவு பலமில்லை யென்றும், இந்தியாவின் உள்நாட்டு நிலைமை மாறுவதைப் பொறுத்து அது தாக்க முயற்சிப்பது இருக்கிறதென்றும் லண்டனிலிருக்கும் சீன ராணுவ அதிகாரி கர்னல் டாங் பாவோ கூறியிருக்கிறார்.

### ஜனாப் ஜின்னாவின் அறிக்கைகள்

இந்திய அரசாட்சியை முஸ்லீம் லீகிடம் பிரிட்டிஷ் சர்க்கார் ஒப்புவித்தாலும் எங்களுக்கு ஆட்சேபமில்லை யென்று காங்கிரஸ் தலைவர்கள் சொன்னது பற்றி ஜனாப் ஜின்னா வெளியிட்டுள்ள ஒரு அறிக்கையில் அடியில் வருமாறு குறிப்பிட்டிருக்கிறார்:-

இந்தப் பேச்சு மனப்பூர்வமானதென்று புத்திசாலியான எம்மனிதனும் நம்ப முடியாது. அப்படி மனப்பூர்வமானதாயிருக்குமானால், அதை நான் வரவேற்கிறேன். பிரிட்டிஷ் சர்க்கார் இதை ஒப்புக்கொண்டு இத்தேச ஆட்சியை முஸ்லீம் லீகிடம் ஒப்புவித்தால், முஸ்லிம் அல்லாதாரை நியாயமாக, பெருந்தன்மையாகக் கூட நடத்துவார்கள். முஸ்லீம்களிடமிருந்து கைப்பற்றிய இந்தியாவை முஸ்லீம்களிடம் ஒப்புவித்தால், பிரிட்டிஷ் சர்க்கார் பழைய பாவத்துக்குப் பிராயச்சித்தம் செய்து கொண்டவர்களாவார்கள்.

ஜனாப் ஜின்னா வெளியிட்டுள்ள மற்றொரு அறிக்கையில், முஸ்லிம்கள் காங்கிரசின் இயக்கத்தில் சேரக்கூடாதென்றும், இந்த உள்நாட்டுக் கலகத்தைத் தடுக்குமாறு இந்துக்களைக் கேட்டுக்கொள்வதாகவும் குறிப்பிட்டிருக்கிறார்.

### மாஸ்கோவில் ஜெனரல் சியாங்கே

ஜெனரல் சியாங்கே ஷேக் மாஸ்கோ போய்ச் சேர்ந்திருப்பதாக அச்சு நாட்டு ரேடியோ தெரிவித்திருக்கிறது.



## பலவிடங்களில் துப்பாக்கிப் பிரயோகம்

### பம்பாயில் 15 பேர் இறந்தனர்

காங்கிரஸ் தலைவர்கள் கைது செய்யப்பட்டதை முன்னிட்டு நாடெங்கும் ஹர்த்தால்களும் ஆர்ப்பாட்டங்களும் நடைபெற்றிருக்கின்றன. பல இடங்களில் துப்பாக்கிப் பிரயோகமும் நடைபெற்றிருக்கிறது. காங்கிரஸ் காரியாலயங்கள் சோதனையிடப் பட்டிருக்கின்றன. கலவரக் காரணமாகத்தடை உத்தரவுகளும் பிறப்பிக்கப்பட்டிருக்கின்றன.

9உ பம்பாயில் போலீஸார் பல இடங்களில் துப்பாக்கிப் பிரயோகம் செய்தனர். 10 பேர் மாண்டதாயும் 20 பேர் காயமுற்றதாயும் தெரிகிறது. கல்லெறியினால் 35 பேர் காயமுற்றனர். இவர்களில் 15 பேர் போலீஸாராகும். இரவு 7-30 மணிக்கும் காலை 6-மணிக்கும் இடையில் யாரும் வெளியே வரக்கூடாதென்று உத்தரவிடப்பட்டிருக்கிறது. பலவிடங்களில் கூட்டத்தைக் கலைக்கக் கண்ணீர்ப் புகைப் பிரயோகமும், தடியடிப் பிரயோகமும் நடத்தப்பட்டதாகத் தெரிகிறது. ஒரு இடத்தில் பஸ் ஒன்று கொளுத்தப்பட்டது. சர்க்கார் தானியக் கடைகள் இரண்டு கொள்ளையிடப்பட்டன. போலீஸ்காரர்கள் முக்கியமாக ஐரோப்பியர் அடிக்கப்பட்டனர். அன்று மொத்தம் 149 பேர் கைது செய்யப்பட்டதாக சர்க்கார் அறிக்கை கூறுகிறது.

புனாவிலும் ஆமதாபாத்திலும் அன்று துப்பாக்கிப் பிரயோகம் நடந்தது. பலர் கைது செய்யப்பட்டனர். லட்சுமணபுரியில் தடியடிப் பிரயோகம் நடைபெற்றது. காசியிலுள்ள காங்கிரஸ் காரியாலயம், வித்யாபீடம், நாகபுரி, கராச்சி, லட்சுமணபுரி கட்டாக்கிலுள்ள காங்கிரஸ் காரியாலயங்கள் முதலியன போலீசாரால் பூட்டப்பட்டிருக்கின்றன.

10உ புனாவில் ஒரு போலீஸ் அதிகாரியின் வண்டிமீது கல்லெறியப்பட்டது. அவர் தொப்பி கிழித்தெறியப்பட்டது. கான்பூரில் பலர் கைது செய்யப்பட்டனர். ஆமதாபாதில் ஆலைகளில் வேலை நடக்கவில்லை. புனாவில் மாணவர்கள் ஊர்வலம் நடத்தினர். போலீஸாரின் துப்பாக்கி—தடியடிப் பிரயோகங்கள் நடந்தன. சூரத்தில் மாணவர் ஊர்வலத்தைப் போலீஸார் தடியடி மூலம் கலைத்தனர். லட்சுமணபுரியில் மாணவர்கள் ஊர்வலத்தில் போலீஸார் துப்பாக்கிப் பிரயோகம் செய்ய நேர்ந்தது. பலர் கைதாயினர்.

10உ பம்பாயில் கலவரம் அதிகரித்தது. தாதர் ரயில்வே ஸ்டேஷனில் கூட்டம் புகுந்து நாசம் விளைவிக்க முயன்றது. போலீஸார்மீது கல்லெறியப்பட்டதால், துப்பாக்கிப் பிரயோகம் நடந்தது. பஸ்கள், வண்டிகள் மறிக்கப்பட்டன. ஆலைகளில் வேலை நடைபெறவில்லை. அன்று வரை மொத்தம் 15 பேர் இறந்தனர். மதுங்கா பிரதேசத்தில் ரயில் வண்டிகள் மீது கல்லெறியப்பட்டது. தந்திக் கம்பிகள் அறுக்கப்பட்டன. தபாலாபீஸ் தாக்கப்பட்டது. ஒரு தபால் பெட்டி திறக்கப்பட்டுக் கடிதங்கள் வாரி இறைக்கப்பட்டன. பஸ்கள் சேதப்படுத்தப்பட்டன. பி. பி. ஸி. ஐ. ரயில்வே ஸ்டேஷனில் தீ வைக்க முயற்சிக்கப்பட்டது. போலீஸார் தடுத்துவிட்டனர். முனிசிபல் லாரி கவிழ்க்கப்பட்டுத் தீவைக்கப்பட்டது. டிராம் வண்டி யொன்றும் கவிழ்க்கப்பட்டது. டெலிபோன் கம்பிகள் அறுக்கப்பட்டன.

அன்று காலை பழைய டில்லியில் பள்ளிக்கூடங்களும் கலாசாலைகளும் மூடப்பட்டன. வைஸ்ராய் மாளிகை, சர்க்கார் காரியாலயங்களை நோக்கி ஒரு பெரிய கூட்டம் சென்றது. பாதையில் கம்பி அரண்களை அமைத்துப் போலீஸார் தடுத்தனர். ஊர்வலம் அங்கேயே நின்றது. ஒரு பகுதியினர் அதைத்தாண்டி மாளிகையை நெருங்கினர். போலீஸார் தடுத்து வேறு பக்கமாகத் திருப்பிவிட்டனர்.

11உ பம்பாயில் நிலைமை மிக மோசமாகிவிட்டதாகத் தெரிகிறது. மில் தொழிலாளர் மில்களைவிட்டு வெளியேறிவிட்டனர். போக்கு வரத்து தடைப்பட்டது. பல இடங்களில் சொக்கப்பனைகள் எரிந்தன. நான்கு இடங்களில் போலீஸார் சுட்டனர். நகரின் வட பகுதியில் பஸ்களும், டிராம்களும் ஓடவில்லை. மாணவர்கள் வேலை நிறுத்தம் செய்தனர். மார்க்கெட்டுகள் மூடப்பட்டிருந்தன. டெலிபோன், தந்திக்கம்பிகள் அறுக்கப்பட்டன. மரங்கள் வேரோடு சாய்க்கப்பட்டு ரஸ்தாவின் குறுக்கே போடப்பட்டன.

புது டில்லி, சாந்தினி சவுக்கில் ஜனக் கூட்டத்தைக் கலையும்படி போலீஸார் சொல்லியும் கேட்காததால் துப்பாக்கிப் பிரயோகம் நடந்தது. போலீஸ் ஸ்டேஷனை நோக்கி, ஒரு கூட்டம் சென்றது. முனிசிபல் ஆபீசுக்கு தீவைக்கப்பட்டது. ஒரு மோட்டார் லாரியும், தீ அணைக்கும் எஞ்சினும் கொளுத்தப்பட்டன.

## காந்திஜி கைது

### ஸ்ரீமதி கஸ்தூரிபாயும் கைதியானர்

பம்பாயில் மகாத்மா காந்தி, மௌலானா அபுல்கலாம் ஆஸாத், ஸர்தார் வல்லபாய் படேல், பண்டித ஜவஹர்லால் நேரு, ஸ்ரீமதி ஸரோஜினி நாயுடு முதலிய சகல காங்கிரஸ் காரியக் கமிட்டி அங்கத்தினர்களும் ஆகஸ்டு 9உ அதிகாலை பம்பாயில் கைது செய்யப்பட்டனர். அவர்களுடன் பம்பாய் மாகாணக் காங்கிரஸ் கமிட்டித் தலைவர், காரியதரிசி முதலியோரும் கைது செய்யப்பட்டனர். மகாத்மா தங்கியிருந்த பிர்லா மாளிகைக்கு காலை 5 மணிக்குப் போலீஸ் கமிஷனர் சென்று மகாத்மாவையும், மகாதேவ தேசாயையும் மீராபென்னையும் கைது செய்து காரில் அழைத்துச் சென்றார். ஸ்ரீமதி பிர்லா காந்திஜிக்கு மாலைகள் அணிவித்து குங்கும திலகமு மிட்டார். மகாத்மா தமது படுக்கையிலேயே பிரார்த்தனையை நடத்தினார். அவர் தம்முடன் பகவத் கீதை, ஆசிரமப் பிரார்த்தனை புஸ்தகம், குரான், சர்க்கா ஆகியவற்றை எடுத்துக் கொண்டு சென்றார். மூவரும் விக்டோரியா டெர்மினஸ் ஸ்டேஷனுக்கு அழைத்துச் செல்லப்பட்டு அங்கிருந்து மற்றத் தலைவர்களுடன் ஸ்பெஷல் ரயிலில் பூனாவுக்குக் கொண்டு போகப்பட்டனர். அன்று இரவு 2 மணிக்கே டெலிபோன் போக்குவரத்து ரத்து செய்யப்பட்டு விட்டது. காலை 8 மணிக்குத் தான் மீண்டும் டெலிபோன் இணைப்பு ஏற்பட்டது.

ஐந்து பேர்களுக்கு மேல் கூடக்கூடாதென்று பம்பாயில் தடை உத்தரவு பிறப்பிக்கப்பட்டிருக்கிறது.

மத்திய மாகாணம் முழுவதிலுள்ள காங்கிரஸ் ஸ்தாபனங்கள் அனைத்தும் சட்ட விரோதமானவை யென்று சர்க்கார் அறிவித்திருக்கின்றனர்.

பூனா, ஆமதாபாத் ஆகியவிடங்களிலும் பலர் கைது செய்யப்பட்டனர்.

அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டிப் பந்தலில் காங்கிரஸ் கொடி வணக்கத்துக்காகக் கூடியிருந்த காங்கிரஸ் தொண்டர்களையும் ஜனங்களையும் கலைந்து போகும்படி போலீஸார் எச்சரித்தனர். பின், கண்ணீர்ப் புகையை வீசினர்; தடி கொண்டும் தாக்கினராம். தேசியக் கொடி இறக்கப்பட்டது.

மகாத்மா காந்தியும் அவருடன் அழைத்துச் செல்லப்பட்ட மூவரும் புனா—ஆமத் நகர் ரஸ்தாவிலுள்ள "ஆகாகான் அரண்மனை"யில் காவலில் வைக்கப்பட்டிருக்கின்றனர். இது ஒரு பெரிய பங்களா. சுற்றிலும் முள்வேலி போடப்பட்டிருக்கிறது. பல இடங்களிலும் போலீசார் காவல் புரிகின்றனர்.

மற்ற தலைவர்கள் எல்லாம் எரவாடா சிறைக்கு அழைத்துச் செல்லப்பட்டனர்.

கைது செய்யப்பட்ட தலைவர்களுக்கும் வெளியிலுள்ளவர்களுக்கும் சம்பந்தம் எதுவுமில்லாத முறையில் முன்னைவிட இப்போது அதிகக் கடுமையான கிரப்பந்தம் விதிக்கப்படுமென்றும் காந்திஜியின் தேக நிலை, வயது, அந்தஸ்து இவற்றைக் கருதி எவ்வளவு சௌகரியம் அளிக்க முடியுமோ அவ்வளவு சௌகரியங்கள் அளிக்கப்படுமென்றும் தெரிவிக்கப்பட்டிருக்கிறது.

#### ராஜன் பாபு கைது

பாபு ராஜேந்திர பிரசாதும் கைதுசெய்யப்பட்டிருக்கிறார். அலகாபாத்திலுள்ள அ. இ. கா. கமிட்டி ஆபீஸைப் போலீசார் பூட்டி விட்டனர். ஒரிஸ்ஸா மாகாண காங்கிரஸ் ஆபீஸைப் போலீஸார் வசப்படுத்திக் கொண்டனர். ஆமதாபாதிலும் டில்லியிலும் பல தலைவர்கள் கைதியாயினர். 5 பேருக்கு மேல் கூடக் கூடாதென்று தடை உத்தரவு போடப்பட்டிருக்கிறது. புனாவில் ஊர்வலங்கள், கூட்டங்களுக்குத் தடை விதிக்கப்பட்டிருக்கிறது.

முந்தின சட்டமறுப்பில் முதல் சத்யாக்ரகியான ஸ்ரீ வினோபா பாவேயும் வேறு சிலரும் வார்தாவில் கைது செய்யப்பட்டனர்.

#### ஸ்ரீமதி கஸ்தூரிபாய் கைது

9உ மாலை பம்பாய் சிவாஜி பார்க்கில் மகாத்மா ஒரு பிரசங்கம் செய்ய விருந்தார். ஆனால் அவர் கைதியாகி விட்டதால், அவருக்குப் பதில் தாம் பேசப்போவதாக ஸ்ரீமதி கஸ்தூரிபாய் காந்தி தெரிவித்திருந்தார். இது காரணமாக ஸ்ரீமதி கஸ்தூரிபாயும், அவருடன் ஸ்ரீ பியாரிலால், டாக்டர் சுசீலா நாயர் ஆகியோரும் கைது செய்யப்பட்டனர். ஸ்ரீமதி கஸ்தூரிபாய் புனாவுக்கு அழைத்துச் செல்லப்பட்டு மகாத்மாவுடன் காவலில் வைக்கப்பட்டிருக்கிறார்.

#### அமெரி அறிக்கை

இந்தியா மந்திரி மிஸ்டர் அமெரி நிகழ்த்திய ரேடியோப் பிரசங்கத்தில் காங்கிரஸின் கோரிக்கையை விட, அது எடுக்க உத்தேசிக்கும் நடவடிக்கையே பெரிதும் கவலை யளிக்கத் தக்கதென்றும், கைத்தொழிற்சாலைகளிலும், வியாபார, நிர்வாக ஸ்தாபனங்களிலும், பள்ளிக்கூடங்களிலும், வேலை நிறுத்தங்கள் உண்டாக்குமாறு தூண்டுதல், போக்குவரத்து சர்வீசுகளைத் தடைப் படுத்துதல், தந்தி டெலிபோன் கம்பிகளை அறுத்தல், திருப்புகளையும் திருப்புகளுக்கு ஆள் சேர்க்குமிடங்களையும் மறியல் செய்தல் ஆகிய வேலைகளுக்கு முஸ்தீபு செய்யப்பட்டதென்றும், இவற்றால் எப்படிச் சுலபமாகப் பயங்கரச் செயல்களும் கலவரங்களும் ரத்தம் சிந்தலும் நிகழக்கூடுமென்றும், இவற்றால் யுத்த முயற்சி அனைத்தும் ஸ்தம்பித்துப் போய் விடுமென்றும், எனவே காங்கிரஸ் இயக்கம் வலுப்பெற ஆரம்பிக்கு முன் இந்திய சர்க்கார் துரிதமாகவும் உறுதியாகவும் நடவடிக்கை யெடுக்க வேண்டியவர்களாக இருக்கின்றனர் என்றும், தண்ட நடவடிக்கை யெடுக்க ஏராளமான ஆதாரமிருந்த போதிலும் பெரிதும் தடை நடவடிக்கையே எடுக்கப் படுகிறதென்றும் குறிப்பிட்டார்.

### சாகும் வரை உண்ணாவிரதம்

அவசியமானால் தாம் சாகும்வரை உண்ணாவிரத மிருக்கும்படி ஏற்படலாமென்பது பற்றி ஆகஸ்டு 7உ மகாத்மா காந்தி தமது சகாக்களுடன் கலந்து யோசித்ததாகவும், தேக நிலை சரியாயில்லாததால் வேண்டாமென்று தலைவர்கள் முதலில் யோசனை கூறி அப்பால் அவர் இஷ்டம்போல் முடிவு செய்யவிட்டு விட்டதாயும் தெரிகிறது என்று ஒரு பம்பாய்ச் செய்தி கூறுகிறது.

காந்திஜி உடனே உண்ணாவிரதம் ஆரம்பிக்கப் போவதில்லை யென்றும், நாட்டின் நிலைமையைக் கண்டறிந்த பின்பே அவர் அக்காரியத்தில் இறங்குவாரென்றும் மற்றொரு செய்தி தெரிவிக்கிறது.

### காங்கிரஸ் தலைவர் செய்தி

கைதியாகும்போது காங்கிரஸ் தலைவர் விடுத்த செய்தியில், "இனி ஒவ்வொருவரும் காங்கிரஸ் தலைவர்தான். இனி அவரவர் இஷ்டப்படி நடக்கவேண்டும்" என்று கூறியிருக்கிறார்.

### ஸ்ரீ நாடிமுத்துப் பிள்ளை ராஜினுமா

தஞ்சை ஜில்லா போர்டுத் தலைவரும், சட்டசபை அங்கத்தினருமான ஸ்ரீ வி. நாடிமுத்துப் பிள்ளை தாம் காங்கிரஸ் ஸ்தாபனங்களில் வகித்து வந்த பதவிகளனைத்தையும் ராஜினுமாச் செய்திருக்கிறார். ஜில்லா போர்டுத் தலைவர் பதவியையும் ராஜினுமாச் செய்யத் தயாராயிருப்பதாகத் தெரிவித்திருக்கிறார்.

## காங்கிரஸ் கமிட்டிகள் சட்ட விரோதமானவை

### சென்னை சர்க்கார் அறிக்கை

அ. இ. காங்கிரஸ் கமிட்டி, கேரள, ஆந்திர, தமிழ் மாகாணக் கமிட்டிகள், சென்னை ஜில்லா காங்கிரஸ் கமிட்டி, அ. இ. கா. கமிட்டி எல்லாம் சட்ட விரோதமான ஸ்தாபனங்கள் என்று சென்னை சர்க்கார் உத்தரவு பிறப்பித்திருக்கிறார்கள். இவற்றின் ஆதரவில் 9 முதல் 24 தேதிவரை பொதுக் கூட்டங்கள், ஊர்வலங்கள் நடத்தக் கூடாதென்றும் போலீஸ் கமிஷனர் உத்தரவு பிறப்பித்திருக்கிறார். தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டிப் பொக்கிஷதாரிடமிருந்து கணக்குப் புஸ்தகங்களும், ரொக்கமும் போலீசாரால் கைப்பற்றப்பட்டன. ஸ்ரீமான்கள் ஆதிகேசவலு நாயக்கர், பாப்பினீடு ஆகியோர் 9உ கைது செய்யப்பட்டனர். விருதுநகரில் ஸ்ரீ காமராஜ நாடாரின் வீடு போலீசாரால் சோதனை யிடப்பட்டு, தஸ்தவேஜிகள் கைப்பற்றப்பட்டன. சென்னையிலுள்ள காலேஜ்கள், பள்ளிக்கூடங்களில் மாணவர்களில் பெரும்பாலோர் செல்லவில்லை. சென்னை ஸ்டாக் எக்ஸேஞ்ச் மூடப்பட்டிருந்தது. மறுநாள் கடைகள் மூடப்பட்டன.

### யூ ஸா விஷயம்

பர்மா மாஜிப் பிரதம மந்திரி யூ ஸா எகிப்தில் காலமாய் விட்டதாக முன்னர் சங்கிங்கிலிருந்து ஒரு செய்தி வெளியாயிருந்தது. இச் செய்திக்கு ஆதாரமில்லை யென்று லண்டனிலிருக்கும் பர்மா சர்க்கார் காரியாலயம் அறிவித்திருக்கிறது. அவர் தற்போது எகிப்திலில்லையென்றும் கெய்ரோச் செய்தி கூறுகிறது.

### மறியல் சட்ட விரோதம்

பம்பாயிலும், ஆமதாபாதிலும் மறியல் செய்வது சட்ட விரோதமென்று மாகாண சர்க்கார் உத்தரவிட்டிருக்கின்றனர்.

### ராஜன் பாபு வீடு பூட்டப்பட்டது

பிஹார் மாகாணக் காங்கிரஸ் கமிட்டி ஆபீஸைப் போலீஸார் பூட்டி விட்டனர். அதோடு பிஹார் வித்யா பீடத்தையும் ராஜன் பாபு வீட்டையும் கூடப் பூட்டி யிருக்கின்றனர்.

தேசத் தலைவர்கள் கைது செய்யப்பட்டதைக் கண்டிப்பதற்காக 10உ கல்கத்தா கார்ப்பரேஷன் தனது கூட்டத்தை ஒத்தி வைத்தது.

பண்டித கோவிந்த வல்லப பாளவியா கைது செய்யப்பட்டிருக்கிறார்.

### ராஜாஜி அறிக்கை

சர்க்கார் அடக்குமுறை நடவடிக்கை பற்றி ராஜாஜி விடுத்துள்ள அறிக்கையில் அடியில் வருமாறு குறிப்பிட்டிருக்கிறார்:-

"எனது வார்த்தைகளுக்கு என் சகபாடிகளும், பிரிட்டிஷ் சர்க்காரும் செவி சாய்க்கவில்லை. அடக்குமுறை இந்தியாவின் பாதுகாப்புப் பிரச்னையைத் தீர்க்காது. ஆயுததாங்கி எதிரிகளை எதிர்க்கவும் பிரிட்டிஷ் யுத்தச் சொன்னவையும் சர்வதேச உறவையும் பராமரிக்கவும் காந்திஜியும் காங்கிரஸ் வாதிகளும் ஒப்புக்கொண்டார்கள். எனவே இடைக் காலத்தில் ஜன ஆதரவுள்ள சர்க்காரிடம் பரிபூரணமாகப் பொறுப்புகளை ஒப்படைப்பதில் கஷ்டமே இராது. பிரிட்டிஷ் சர்க்கார் இதைச் செய்ய ஒப்புக்கொண்டால், ஒத்துழைப்புக்குரிய நிபந்தனைகளைத் தெரிவிக்குமாறு முஸ்லிம் லீகைக் கேட்கும்படி காங்கிரசுக்கு யோசனை சொல்லுவேன். சர்க்காரின் அவசர நடவடிக்கை மூலம் புதிய சங்கடங்கள் ஏற்பட்டு விட்டன."

### கடியார நேரத்தில் மாறுதல்

செப்டம்பர் முதல் தேதியிலிருந்து கடியாரங்களின் நேரத்தை ஒரு மணி முன்னதாகத் தள்ளிவைக்கும் இந்திய சர்க்கார் உத்தேசத்தைச் சென்னை சர்க்கார் ஆமோதித்திருக்கின்றனர். இந்த மாற்றங் காரணமாக இப்போது 6 மணிச் சமயமா யிருப்பது ஷை தேதி முதல் 7 மணியாக இருக்கும்.

### ஹைகோர்ட் வேலை நேரம்

மேற்படி கடியார நேர மாற்றங் காரணமாக, சென்னை ஹைகோர்ட், செப்டம்பர் 1-ம் தேதி முதல் முற்பகலில் 10-45 லிருந்து 1-45 வரையும், பிற்பகலில் 2-30 லிருந்து 4-45 வரையும் கூடும்.

## தமிழ் நாட்டிலும் தலைவர்கள் கைது

### மதுரையில் துப்பாக்கிப் பிரயோகம்

சென்னை தேனாம்பேட்டையிலுள்ள தமிழ் நாடு காங்கிரஸ் கமிட்டிக் காரியாலயத்தையும், ராயப்பேட்டையிலுள்ள பழய காங்கிரஸ் மாளிகை மைதானத்தையும் போலீசார் கைப்பற்றினர். காங்கிரஸ் கமிட்டிக் காரியாலயத்தைப் போலீஸார் சோதனையிட்டு அதை முத்திரை வைத்திருப்பதாகத் தெரிகிறது. மதுரையில் ஸ்ரீ சிதம்பர பாரதி கைது செய்யப்பட்டார். ஒரு பொதுக் கூட்டம் தடை செய்யப்பட்டது.

### மதுரை

மதுரையில் 10உ சமாதான பங்கம் விளைவிக்கக் கூடிய கலகம் நடந்ததால் போலீஸார் துப்பாக்கிப்பிரயோகம் செய்ய நேர்ந்ததாயும், இதனால் மூவர் கொல்லப்பட்டதாயும் 23 பேர் காய முற்றதாயும் சென்னை சர்க்கார் அறிக்கை கூறுகிறது.

15 தினங்கட்குப் பொதுக் கூட்டங்கள் கூட்டக் கூடாதென்றும் 5 பேர்க்கு மேல் கூடக்கூடாதென்றும் மதுரை நகர மாஜிஸ்திரேட் தடை உத்தரவு பிறப்பித்திருக்கிறார். இரு கான்ஸ்டபில்கள் தாக்கப்பட்டதாயும், ஒரு கான்ஸ்டபிளின் ஸைக்கிள் பிடுங்கப்பட்டு நொறுக்கப்பட்டதாயும், ஒரு கோர்ட்டுச் சேவகன் கொண்டு போன தபாலைப் பிடுங்கியதாயும் மாஜிஸ்திரேட் தமது உத்தரவில் குறிப்பிட்டிருக்கிறார்.

10உ ஸ்ரீவில்லிபுத்தூர் தாசில்தாரையும் போலீஸாரையும் ராஜபாளையத்தில் ஜனங்கள் வளைத்துக்கொண்டு தாக்கியதாகவும், இதன் காரணமாகப் போலீஸார் துப்பாக்கிப் பிரயோகம் செய்ய நேர்ந்ததாயும் தெரிகிறது. 4 பேர் கைது செய்யப்பட்டனர். போலீஸ் ஸ்டேஷன் மீது கல்லெறியப்பட்டதாம்.

அருப்புக் கோட்டை—விருதுநகர் லைனில் தந்திக் கம்பிகள் அறுக்கப்பட்டன.

### சென்னையில்

11உ பச்சையப்பன், லயோலாக் காலேஜ் மாணவர்கள் வேலை நிறுத்தஞ் செய்தனர். 1000 பேர் ஊர்வலமாகச் சென்றனர். போலீஸார் தடுத்துக் கலையும்படி சொன்னார்கள், பின் தடியடிப் பிரயோகம் நடத்தினர். கூட்டம் கலைந்தது.

### திரு. அண்ணாமலைப் பிள்ளை கைது

தமிழ்நாடுக் காங்கிரஸ் கமிட்டிக் காரியதரிசி ஸ்ரீ அண்ணாமலைப் பிள்ளையும், உதவிக் காரியதரிசி ஸ்ரீ குப்புசாமி முதலியாரும் திருவண்ணாமலையில் கைது செய்யப்பட்டு வேலூருக்குக் கொண்டு போகப்பட்டிருக்கின்றனர்.

### ஸ்ரீ முத்துரங்கமுதலியார் கைது

பம்பாய் சென்றிருந்த ஸ்ரீ முத்தரங்க முதலியாரும், ஸ்ரீ பக்தவத்சலமும், சென்னை சென்டிரல் ஸ்டேஷனில் இறங்கியதும் கைது செய்யப்பட்டனர். ஆந்திராவிலும் ஸ்ரீ கொண்ட வெங்கடப்பையா, ஸ்ரீ காளேஸ்வர ராவ் முதலிய பலர் கைது செய்யப்பட்டிருக்கின்றனர்.

## காந்திஜி திட்டத்துக்கு காங்கிரஸ் கமிட்டி ஆதரவு

★

(5-ம் பக்கத் தொடர்ச்சி)

பயன்படுத்திக் கொள்ளாதிருப்பது முட்டாள் தனமென்றும் அவர் குறிப்பிட்டார்.

பின்னர் பண்டித ஜவாஹர் (காரியக் கமிட்டி நிறைவேற்றிய) தீர்மானத்தைப் பிரேரித்துப் பேசினர். "பிரிட்டிஷ் சர்க்கார் இத்தீர்மானத்தை ஏற்றுக்கொண்டால் நிலைமை மாறிவிடும். அதனால் இந்நாட்டுக்கும் நன்மை, சர்வ தேசங்களுக்கும் நன்மை என்றார்". சர்தார் படேல் தீர்மானத்தை ஆதரித்தார். இத்துடன் கூட்டம் மறுநாளைக்கு ஒத்திவைக்கப்பட்டது.

மறுநாள் பகல் 3 மணிக்கு காங்கிரஸ் கமிட்டி மீண்டும் கூடியபோது தீர்மானம் பெருவாரியான ஆதரவு பெற்று நிறைவேறியது. 13 பேரே எதிராக ஓட்டுக் கொடுத்தனர். பொதுஜன இயக்கத்தை ஒத்திவைக்க வேண்டுமென்று கொண்டுவரப்பட்ட திருத்தத்தைத் தலைவர் அனுமதிக்கவில்லை. காங்கிரஸ்—லீக் சமரசத்துக்கும் தற்காலிக தேசிய சர்க்கார் அமைப்புக்கும் வழிதேட வேண்டுமென்று டாக்டர் சுப்பராயன் ஒரு திருத்தம் கொண்டுவந்தார், பின்னர் வாபீஸ் வாங்கிக்கொண்டார். பொதுவுடமைக் கட்சியினரும் இதே தோரணையில் ஒரு திருத்தம் கொண்டு வந்தனர். முடிவில் திருத்தங்கள் பலவும் ஓட்டுக்கு விடப்பட்டு நிராகரிக்கப்பட்டன. அசல் தீர்மானம் நிறைவேறியதும் அதற்குச் சந்தோஷம் தெரிவித்து மகாத்மா சுமார் 2 மணி நேரம் பேசினர். "சுயேச்சையைக் கோருவதில் இந்தியா செய்துள்ள குற்றம் என்ன? உலகம் பூராவும் இந்தியாவுக்கு விரோதமாக இருந்தாலும், இந்தியா தீரத்துடன் நின்று பிரிட்டனிடமிருந்து தன் சுதந்திரத்தைப் பிடுங்கும்" என்று அவர் குறிப்பிட்டார். பாகிஸ்தான் பிரசினையைத் தீர்ப்பது சம்பந்தமாக அவர் குறிப்பிட்டது வருமாறு:—

"பாகிஸ்தான் பிரச்னையை ஒரு விசாரணை சபைமூலம் தீர்த்துக்கொள்ளுவோம். விசாரணை சபையின் முடிவை நாம் ஏற்க வேண்டும். முஸ்லிம்கள் தங்களுடைய சகோதரர்களிடையே மனமாற்றத்தை உண்டு பண்ணி பாக்கிஸ்தான் திட்டத்துக்கு அவர்களது சம்மதத்தைப் பெற வேண்டும். முஸ்லிம்கள் தனித்து வாழ முடியாது. ஹிந்துஸ்தானில்லாமல் பாகிஸ்தான் ஏது? இந்தியாவை எந்த வகுப்பினரிடமும் ஒப்படைக்கலாமென்று மௌலானா ஆஸாத் கூறியதை நான் பூரணமாக ஆதரிக்கிறேன். அதிகாரம் முஸ்லிம் பொதுமக்கள் கையில் மாறினால் அது கண்டு நான் வருந்தமாட்டேன்."

காங்கிரஸ் தலைவர் தமது முடிவுரையில், தீர்மானத்தின் நகல்களை ஜனாதிபதி ரூஸ்வெல்ட், சீனா, லண்டன் ஆங்குள்ள ரஷ்ய ஸ்தானீகர் முதலியவர்களுக்கு அனுப்பப் போவதாகத் தெரிவித்தார், இரவு 10 மணிக்குக் கூட்டம் முடிந்தது.

### அதிகாரத்தை மாற்ற

மத்தியிலும் மாகாணத்திலும் உண்மையான அதிகாரத்தை உடனே இந்தியரிடம் மாற்ற வேண்டுமென்று பிரிட்டிஷ் சர்க்காரை வற்புறுத்துவதாக சென்னையில் கூடிய ஜஸ்டிஸ் கட்சி நிர்வாகக் கமிட்டி தீர்மானிக்கிறது.



## கடைகளை மூடக் கூடாது

### மீறினால் மூன்று வருஷம் தண்டனை

ஹர்த்தாலின்போது கடைகளையோ சிற்றுண்டிச்சாலைகளையோ மூடக்கூடாது என்று இந்திய சர்க்கார் பாதுகாப்புச் சட்டப்படி ஓர் தடை உத்தரவைப் பிறப்பித்திருக்கின்றனர். சமூக வாழ்க்கைக்கு அத்யாவசியமான சப்ளைகள் கிடைக்க வேண்டி கடைகளையும் சிற்றுண்டி விடுதிகளையும் திறந்து வைக்கும்படி கேட்கவும், மூடப்பட்ட கடைகளைத் திறந்து வைக்க உத்தரவிடவும் திறக்காவிட்டால் உசிதமான ஏஜன்வி மூலம் திறக்கும்படி செய்து வழக்கம்போல் வியாபாரம் நடத்த ஏற்பாடு செய்யவும் ஜில்லா மாஜிஸ்திரேட்டுகளுக்கு அதிகார மளிக்கப்பட்டிருக்கிறது. இந்த உத்தரவை மீறினால் மூன்று வருஷம் வரைச் சிறைத் தண்டனையோ, அபராதமோ அல்லது இரண்டுமோ விதிக்கப்படும். சமூக வாழ்க்கைக்கு அத்யாவசியமான பொருள் என்னென்ன என்பது விதியின் அட்டவணையில் கொடுக்கப்பட்டுள்ளது. அவற்றில் பின்கண்ட பொருள்கள் அடக்கம்: தானியங்கள், பயறு வகைகள், மாவு; இவற்றைக் கொண்டு செய்யப்படும் உணவு வகைகள்; சர்க்கரையும், வெல்லமும்; பால், நெய் உள்பட பாலிலிருந்து கிடைக்கும் பொருள்கள்: முட்டைகள், தாவர எண்ணெய் வகைகள்; காய்கறிகளும், பழங்களும்; இறைச்சி, மீன், கோழி முதலியன; வாசனைத் திரவியங்களும், உப்பும், மண் எண்ணெ, மரக்கரி, நிலக்கரி, விறகு, நெருப்புப் பெட்டி, மருந்து வகைகள், சவர்க்காரம், தீவனம்; பொட்டு தவிடு, பிண்ணாக்கு.

### காங்கிரஸ் தஸ்தவேஜி

அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டிக் காரியாலயத்தைப் போலீஸார் சென்ற மேமீ 26உ சோதனை போட்டுக் கைப்பற்றிய சில தஸ்தவேஜிகளை இந்திய சர்க்கார் இப்போது பிரசுரித்திருக்கின்றனர். இச் செய்கையைக் காந்திஜி உள்பட பல தேசத் தலைவர்களும் கண்டித்து அறிக்கைகள் வெளியிட்டுள்ளனர்.

### செட்டியார்கள் நலஉரிமைச் சங்கம்

#### மாகாண பூப்பந்தாட்ட போட்டி விளையாட்டு

12-8-42முதல் காலை மாலை இரு வேளைகளிலும் விளையாட்டு நடைபெறுகிறது. பிரபல விளையாட்டாளர்களான சென்னை K. தெக்ஷிணாமூர்த்தி, பொம்மூர் கு. கந்தசாமி, திருச்சி R. ராஜகோபால், அபிராமம் ஷேக்தாவுத், கும்பகோணம் உடையார் சந்தானசாமி, பாண்டிசேரி வீராசாமி செட்டி, சந்தானம், நாகூர் பாபு பக்ருதீன், பட்டுக்கோட்டை சுப்பையா முதலியவர்கள் இதில் கலந்து கொள்கிறார்கள்.

மைசூர் சமஸ்தானத்திலுள்ள காங்கிரஸ் கமிட்டிகள் எல்லாம் சட்ட விரோதமானவையென்று சர்க்காரறிவித்திருக்கின்றனர்.







## புதுக்கோட்டைச் சட்ட சபை

புதுக்கோட்டை சட்ட சபை நவம்பர் 23உ கூடி மூன்று நாள் நடைபெறும்.

### தீட்டாத அரிசி

குறைவாகத் தீட்டப் பெற்ற அரிசியை உபயோகித்தால், அரிசித் தட்டுப்பாட்டை ஓரளவு குறைக்க முடியுமென்றும், எனவே பொது ஜனங்கள் அந்த மாதிரி அரிசியையே கேட்டு வாங்க வேண்டு மென்றும் புதுக்கோட்டை சர்க்கார் ஒரு அறிக்கை வெளியிட்டிருக்கிறார்கள்.

### நாடக மகாநாடு

மதுரையில் நடைபெற்ற முத்தமிழ் மகாநாட்டின் ஒரு பகுதியான நாடக மகாநாட்டில், முனிசிபாலிடிகள் பொதுத் தியேட்டர்களை அமைக்கும்படி கேட்டுக் கொள்வதாயும், தமிழ் இலக்கியத்துக்கும் இசைக்கும் தனித்தனிப் பகுதிகள் இருப்பது போன்று தமிழ் டிராமாவுக்கும் ஒரு பகுதி ஏற்படுத்துமாறு அண்ணாமலை யூனிவர்ஸிட்டியைக் கேட்டுக் கொள்வதாயும் பல தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

மகாநாட்டில் ஸ்ரீமான்கள் T. K. சிதம்பரநாத முதலியார், கி. ஆ. பெ. விஸ்வநாதம் முதலியோர் பேசினர்.

### கரன்ஸி நோட்டுகள்

இந்திய சர்க்கார் கரன்ஸி நோட்டு அச்சிடும் யந்திர சாலையில் 1940-41ல் சுமார் 59½ கோடி நோட்டுகள் அச்சிடப் பெற்றனவாம்; முன் வருடம் அச்சிடப்பெற்றவை 29 கோடி 10 லட்சமாகும். இப்போது ஒரு ரூபாய் நோட்டுகள் தினம் 25 லட்சம் வீதம் அச்சாகின்றனவாம். ஷை வருடக் கடைசியில் சர்க்கார் வசமிருந்த வெள்ளியின் அளவு சுமார் 47 கோடித் தோலா எடையாகும்; இதில் 19 கோடித் தோலா வெள்ளி நாணயம்; மற்றது வெள்ளிக் கட்டி.

### வாக்காளர் தொகுதி

சென்னை அஸம்பிளி, கவுன்சில் இவற்றின் வாக்காளர் தொகுதிபற்றிய புள்ளி விவரங்களைச் சென்னை சர்க்கார் பிரசுரித்திருக்கின்றனர். அஸம்பிளியின் பிரதேசத் தொகுதிகளின் வாக்காளர் தொகை முன்னைவிட 1,53,529 அதிகரித்திருக்கிறது. முந்தின தேர்தலுக்குப் பிறகு வாக்காளர் தொகை 61,45,515 லிருந்து 65,86,761 ஆக உயர்ந்திருக்கிறது. பிரதேசத் தொகுதிகளில் 15,31,173 ஸ்திரீ வாக்காளர் இருக்கின்றனர்.

### ஆறு கடக்கும் பயிற்சி

ஒவ்வொரு சோல்ஜருக்கும் நதிகளைக் கடக்கத் தெரிய வேண்டியது மிக அவசியம். அதற்கான பயிற்சிகள் அளிக்கப்படுகின்றன என்று இந்திய யுத்த இலாகா பத்திரிகைக் குறிப்பொன்று கூறுகிறது. தேக்கமான ஜலத்தில் பயிற்சியை ஆரம்பித்து, படிப்படியாய் பயிற்சி கடினமாகி பிறகு வெகு வேகமாகச் செல்லும் நதியைக் கடக்க சோல்ஜர்களுக்குச் சொல்லிக் கொடுக்கப்படுகிறது. நீந்தவும், படகுகளை நடத்தவும் சோல்ஜர்கள் கற்றுக் கொள்கிறார்கள்.

### ஆங்கில பாஷை

மெல்போர்ன் யூனிவர்ஸிட்டியைச் சேர்ந்த புரபஸர் ப்ரவுன் ஆங்கில பாஷையின் பிராபல்யத்தைப்பற்றி ஆசிரியர்கள் கூட்டத்தில் அடியில் வருமாறு குறிப்பிட்டிருக்கிறார்:—

இங்கிலீஷ் தாய்பாஷையாக 19 கோடிப் பேரால் பேசப்படுகிறது. இன்னும் 30 கோடிப் பேருக்கு அது நன்கு தெரியும்; அதை அவர்கள் உபயோகிக்கிறார்கள். பல தேசங்களில் பள்ளிக் கூடங்களில் அது கட்டாய பாடமாக வைக்கப்பெற்றிருக்கிறது. உலகிலுள்ள செய்திப் பத்திரிகைகளில் பாதிக்கு மேல் இங்கிலீஷில் அச்சிடப்படுகின்றன. உலகத் தபாலில் முக்கால் பங்கு இங்கிலீஷில் எழுதப்படுகிறது. உலகிலுள்ள ரேடியோ ஸ்டேஷன்களில் ஐந்தில் மூன்று பங்குக்கு மேற்பட்டவை செய்திகளையும் அறிக்கைகளையும் ஆங்கிலத்தில் ஒலிபரப்புகின்றன.

## ஹோட்டல்களில் சுகாதாரம்

ஹோட்டல்களில் அடியிற்கண்ட சுகாதார முறைகளைக் கையாள வேண்டியது அவசியம்:—

வேலைக்காரர்கள் அத்தனைபேரும் மிகச் சுத்தமாக இருக்க வேண்டும்; சுத்தமான உடை அணிந்திருக்க வேண்டும். சுகாதார அதிகாரிகள் தேவைப்படும் போது அவர்கள் சுகாதாரப் பரிசோதனைக்கு உட்பட வேண்டும். சமையல், சாப்பாட்டு அறைகள் மிகவும் சுத்தமாக வைக்கப்படவேண்டும்; போதிய அளவு வசதிகளுடன் அமைக்கப்பட வேண்டும். பாத்திரங்களைக் கழுவ கொதிக்கும் வெந்நீர் எப்போதும் தயாரா யிருக்க வேண்டும்.

ஆகார பதார்த்தங்கள் இருந்து கெட்டுப் போக விடாதபடி பார்த்துக் கொள்ள வேண்டும். ஒரு நாள் தயாரித்த பண்டங்களை எக் காரணத்தைக் கொண்டும் மறு நாளைக் கென்று வைத்திருக்கக் கூடாது. மீதமுள்ளவற்றை அன்றைய தினமே குப்பைத் தொட்டியில் எறிந்துவிட வேண்டும். சமையலறையிலும் சாப்பாட்டு அறையிலும் ஈ, கொசு, எலி, பூச்சிகள் அணுகாதபடி பந்தோபஸ்து செய்யப்பட வேண்டும். இது முடியாவிட்டால் ஆகார பதார்த்தங்களிருக்கும் பாத்திரங்களையாவது அவ்வாறு பத்திரப் படுத்த வேண்டும்.

ஹோட்டலில் வேலை செய்வோர் சுத்தமாக, வேலை செய்ய லாயக்குள்ளவராக இருக்கின்றனரா என்பதைப் பொறுப்பும் அதிகாரமுமுள்ள ஒருவர் தினமும் பரிசோதனை செய்த பின்பே வேலைகளை ஆரம்பிக்க வேண்டும். அவர் அசுத்தமா யிருப்பதாகவோ அல்லது நோயுற் றிருப்பதாகவோ சந்தேகப்பட்டால் அவரை வேலை செய்ய வொட்டாமல் தடுக்க வேண்டும். இந்த விதிகள் கவனிக்கப்பட்டால், உணவுப் பொருள்கள் மூலம் நோய் பரவுவது பெரும்பாலும் தடுக்கப்படும்.

—"HEALTH"

### ஸ்ரீ விஸ்வநாத தாஸுக்கு 3 மாதம்

ஆஸ்கா என்ற இடத்தில் பிரசங்கம் செய்தது சம்பந்தமாகக் குற்றம் சாட்டப்பட்டிருந்த ஒரிஸ்ஸா மாஜிப் பிரதம மந்திரி ஸ்ரீ விஸ்வநாத தாஸுக்கு மூன்று மாத வெறுங்காவல் தண்டனை விதிக்கப்பெற்றிருக்கிறது.

## சேவா கிராமத்தில் முஸ்லிம் திருமணம்

★

சமீபத்தில் சேவா கிராமத்தில் நடைபெற்ற ஒரு முஸ்லிம் திருமணத்தைப் பற்றி மகாதேவ தேசாய் 'ஹரிஜன்' (ஆகஸ்டு 2உ.) பத்திரிகையில் அடியில் வருமாறு விவரித்திருக்கிறார்:—

நாங்கள் சபர்மதியி லிருந்தபோது, காந்திஜி பல ஆச்ரமப் பெண்களைக் கன்னிகாதானம் செய்துகொடுத்தார்; அவர்களி லிருவர் முஸ்லிம் பெண்கள். ஆனால் அவர்கள் ஆசிரமப் பெண்களாயிருந்ததால் அந்த வைபவத்தில் விசேஷ மெதுவுமில்லை. பின்னர், ஆசிரம வாசிகளல்லாத பல ஹிந்துக்கள் எளிய முறையில், வீண் ஆடம்பரமின்றி மண வைபவத்தை நடத்தலாம் என்பதைக் காட்டுவதற்காக தங்கள் பையன்களுக்கும் பெண்களுக்கும் ஆசிரமத்தில் கலியாணம் நடத்தியிருக்கிறார்கள். ஆனால் ஆசிரம வாசிகளல்லாத ஒரு முஸ்லிமின் திருமணம் சென்ற ஞாயிற்றுக்கிழமைதான் ஆசிரமத்தில் முதன் முதலாக நடந்தது. டாக்டர் ஷிரீன்காஸி M.B., B. S. மணமகள்; டாக்டர் யூஸுப் M.B., B. S. மணமகன். நாலு வருஷங்கட்கு முன் வரையிலும் எங்களுக்கு டாக்டர் ஷிரீனைப்பற்றி ஒன்றும் தெரியாது. எங்கள் ஆஸ்பத்திரியை நிர்வகித்துவந்த டாக்டர் சுசீலா ஒன்றிரண்டு மாத காலம் ரஜாவில் சென்றபோது, அவருடன் லேடி ஹார்டிஞ்ச் காலேஜில் படித்திருந்த டாக்டர் ஷிரீன் அவருடைய ஸ்தானத்தில் ஊழியம் புரியத் தாமாக முன் வந்தார். அதன் பின் அவர் பல ஸிவில் ஆஸ்பத்திரிகளில் உதவி ஸர்ஜனாக வேலைபார்த்து வருகிறார்; எனினும் அவர் ஆசிரமத்துடன் கொண்டிருந்த தொடர்பு நாளாவட்டத்தில் பலப்பட்டுவிட்டது. ஒருநாள் காலை அவர் காந்திஜியிடம் வந்து தான் ஒருவரை மணக்க நிச்சயித்திருப்பதாயும், தனது தந்தையார் காலஞ் சென்றுவிட்டபடியால் மகாத்மாவே அவருடைய ஸ்தானத்திலிருந்து கன்னிகாதானம் பண்ணவேண்டுமென்றும் சொன்னபோது காந்திஜி உடனேயே சம்மதித்துவிட்டார். மண மக்கள் இருவரும் மிக எளிய கதராடை அணிந்திருந்தனர். பத்து நிமிஷ நேரத்துக்குமேல் மணச் சடங்கு நடைபெறவில்லை. வார்தாவிலுள்ள பிரபல முஸ்லிம்கள் ஹிந்துக்கள் அடங்கிய சிறு கூட்டம் விஜயஞ்செய்திருந்தது.

முஸ்லிம் சட்டப்படியுள்ள கிரியைகள் நிகழ்ந்ததும், மணமக்க ளிருவருடைய கையெழுத்துக்களும் காந்திஜி உள்பட ஐவருடைய சாட்சிக் கையெழுத்துக்களும் பதிவு செய்து கொள்ளப்பெற்றன. காந்திஜி உருதுவிலே கையெழுத்திட்டார். ஆசிரமவாசிகளுடன் மணமக்களது உறவினர், ஸ்ரீமதி ஜானகி தேவி, அன்சாரி சாகிபு, ஹஸன் சாகிபு (வார்தா பாரிஸ்டர்), ஸிவில் ஸர்ஜன், செஷன்ஸ் ஜட்ஜ், இன்னும் பல அதிகாரிகளும் விஜயஞ் செய்திருந்தனர்.

---

### நெற்குப்பையில் தேசிய வாலிபர் சங்கம்

1-8-42 அன்று காலை 10 மணியளவில் ஸ்ரீ அ. குமரப்பா அவர்கள் தலைமையில் நடைபெற்ற கூட்டத்தில் தேசிய வாலிபர் சங்கம் அமைக்கப்பட்டது. தேசியக் கொடியேற்றல், சங்கத்திறப்பு, காந்திஜி படத்திறப்பு விழா முதலியன முறையே அழ. விஸ்வநாதன், கே. வெங்கட்ராமன், என். கிருஷ்ணமூர்த்தி இவர்களால் நிறைவேற்றப்பட்ட பிறகு நிர்வாகஸ்தர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டனர். தலைவர்: வ. அழகப்பன்; உபதலைவர்: கா. லெட்சுமணன்; காரியதரிசி: சுப. அருணாசலம்; உபகாரியதரிசி ஜ. பி. சுப்பிரமணியன்; பொக்கிஷதார்: கா.வள்ளியப்பன்.

### திலகர் தினம்

1-8-42 அன்று மாலை சுமார் 6 மணிக்கு கிழக்கூடத்தின் முன்பாக ஸ்ரீமான் அ. குமரப்பா அவர்கள் தலைமையில் ஒரு பொதுக் கூட்டம் நடைபெற்றது. பல அன்பர்கள் திலகரைப்பற்றி மிக உருக்கமாகப் பேசினார்கள்.

---

நிதானமான ஆரோக்கிய முள்ள ஒரு மனிதனின் உடலிலுள்ள ரசாயனப் பொருள்களை யெல்லாம் தனித் தனியாகப் பிரித்து விற்றால், மொத்தம் 2 ரூபாய் தான் கிடைக்குமாம்!







அமெரிக்காவில் ஒரு காலத்தில் க்ஷய ரோகம் என்றாலே என்னவென்று ஜனங்கட்குத் தெரியாதிருந்தது. க்ஷயரோகிகளைக்கண்டு ஜனங்கள் அளவுகடந்த பீதி கொண்டார்கள். க்ஷயரோகி ஒரு மணியைக் கட்டிக்கொண்டு வெளியில் நடமாட வேண்டுமென்று சட்டம் செய்யுமாறு ஒரு சட்டசபை மெம்பர் மசோதா கொண்டுவந்தாராம்.

வீதிகளில் மோட்டார் விபத்துக்கள் ஏற்பட்டால் அது ஜனங்களிடையே பெரிய பரபரப்பை உண்டுபண்ணுகிறது. ஆனால் அதே சமயத்தில் கார் விபத்துகளைப் போன்று மும்மடங்கு மரண விகிதத்தை உண்டு பண்ணும் க்ஷய ரோகத்தைப் பற்றி ஜனங்கள் அவ்வளவு பரபரப்பு அடைவதில்லை.



## காரைக்குடி நகர சபைக் கூட்டம்

★

காரைக்குடி நகர சபையின் சாதாரணக் கூட்ட மொன்று சென்ற சனிக்கிழமை மாலை 4 மணிக்கு "காந்தி மாளிகை"யில் நடைபெற்றது. சேர்மன் ஸ்ரீ சி. முரு. நாராயணன் செட்டியார் தலைமைவகித்தார். அவருடன் 12 அங்கத்தினர்கள் வந்திருந்தனர். 5-வது வார்டுக்குப் புதிதாகத் தேர்ந்தெடுக்கப் பெற்ற ஸ்ரீ அண. சா. ராமசாமிச் செட்டியார் ராஜ விசுவாசப் பிரமாணம் எடுத்துக் கொண்டார். ஸ்ரீ டி. பார்த்தசாரதி ஐயங்கார் ரெஸ்டோர் செய்யப்பட்டார். இப்பொழுது இருந்து வரும் பிரைவேட் பஸ் ஸ்டாண்டைக் குத்தகைக்கு எடுத்து, பப்ளிக் பஸ் ஸ்டாண்டாக விளம்பரம் செய்யலாமென்ற கமிஷனர் குறிப்பு நிராகரிக்கப்பட்டு, கழனிவாசல் தர்மாசனம் 6-வது வார்டு டி. எஸ். 20-ல் மயானம் போகும் பாதைக்குத் தென்புறமிருக்கும் காலி இடத்தை 20 வருடத்துக்குக் குத்தகைக்கு எடுத்து முனிசிபல் பஸ் ஸ்டாண்டை அதில் நடத்தத் தீர்மானிக்கப்பட்டது.

ஆகாய விமானத் தாக்குதல் ஏற்படும் பொழுது பொதுஜனப் பாதுகாப்பு நிமித்தம் தோண்டப்படும் சிறு பள்ளங்கள், தீ அணைப்பதற்காகக் கட்டப்படும் தண்ணீர் தொட்டிகள் முதலியவற்றிற்கு சர்க்கார் பணத்திலிருந்து கொடுக்கப்படுமென்றும், முனிசிபல் கட்டிடங்கள், முனிசிபல் உத்யோகஸ்தர்கள் இவர்களது பாதுகாப்புக்காகச் செய்யப்படும் வேலைகளின் செலவு முனிசிபல் நிதியிலிருந்து கொடுக்கப்படவேண்டு மென்றும் தெரிவித்து வாலான சர்க்கார் உத்தரவு ரிக்கார்டு செய்யப் பெற்றது.

முனிசிபல் மின்சாரச் சங்குக்கு சர்க்காரிட மிருந்து மாதம் 5 ரூ. வீதம் வாடகை வாங்குவதென்றும் 1941-42ம் வருடத்துக்கு பாமரிப்புச் செலவுக்காக டி. கே. வி. சாயி ஆயுர்வேத ஆஸ்பத்திரிக்கு ரூ 200 நன்கொடை யளிப்பதென்றும், ஆஸ்பத்திரிகளுக்குத் தேவையான உடைகளை, சென்னை மாகாணக் கைத்தறி நெசவாளர்கள் கூட்டுறவு சங்கத்திலிருந்து வாங்குவதென்றும் தீர்மானிக்கப் பெற்றன. விளக்கணைப்பு அமுலிலிருக்கும் காலத்தில் வீதி விளக்குகள் பராமரிப்புக்குக் கொடுக்கும் விகிதத்தைக் குறைப்பது சம்பந்தமாக எலக்டிரிக் சப்ளைக் கார்ப்பரேஷன் மானேஜிங் டைரக்டரைக் கண்டுபேச சேர்மன், கமிஷனர், ஸ்ரீ தண்ணீர்மலைச் செட்டியார் ஆகிய மூவடங்கிய கமிட்டி நியமிக்கப் பெற்றது. கல்லுக்கட்டி ஊருணி சம்பந்தமாகத் தேவகோட்டை சப் கோர்ட்டில் நடைபெற்று வந்த வழக்கு, முனிசிபாலிடிக்குச் சாதகமாக செலவு தொகையுடன் தள்ளுபடி செய்யப்பட்டிருக்கிறதென்ற விவரம் ரிக்கார்டு செய்யப் பெற்றது. கல்லுக்கட்டி மடைக்குழி இடத்தின் பாத்தியதை சம்பந்தமான வழக்கு மனுதாருக்கு (காரைக்குடி கிராமச் சொந்தக்காரருக்கு) அனுகூலமாக முடிவு செய்யப்பட்டிருக்கிறது. அப்பீல் செய்வது பற்றி யோசிக்க டிக்ரி காப்பிக்கு மனுச் செய்ய அனுமதிக்கப்பெற்றது.

1941-42ம் வருடத்திய நிர்வாக அறிக்கை அங்கீகரிக்கப் பெற்றது. (ஷை நிர்வாக அறிக்கையின் முக்கிய பாகங்கள் மற்றோரிடத்தில் பிரசுரிக்கப் பெற்றிருக்கின்றன. ஷை நிர்வாக அறிக்கையின் பேரில் ஜில்லாக் கலக்டர் குறிப்பிட்டுள்ள ரிமார்க்குகள் கவுன்சிலில் வாசிக்கப்படவில்லை.)

## எடை கூடுவதற்கு வழி

★

(J. G. ஒய்ட், M. D.)

முப்பத்தைந்து வயதுக்கு மேலே, தேகாரோக்கியம் நல்லவிதமாக இருக்க, எடை மட்டும் சிறிதளவு கம்மியாகவிருந்தால் அதனால் பாதகம் இல்லை. என்றாலும் அதை அதிகமாக்கிக்கொள்ள வேண்டும் என்று ஆசைப்படுகிறவர்கள் நாம் கீழே சொல்கிறமாதிரி செய்ய வேண்டும்.

தினம் மூன்று வேளை பூர்த்தியாகச் சாப்பிடுங்கள். சாப்பாட்டிலே கிரீம், வெண்ணை போன்ற கொழுப்புப் பொருள்கள் அதிகமாகச் சேரவேண்டும். அல்லது அவைகளின் பதிலிகள்: ஒலிவுப்பழம், தாவர எண்ணெய்கள், கொட்டைப் பருப்புகள், சோயா அவரை, பிற அவரைகள். இனிப்புப் பழங்களையும்—வாழைப் பழம், பேரீச்சம் பழம், கிசுமிசு முதலியவை—கூடுதலாகச் சேர்த்துக்கொள்ள வேண்டும். அவைகளைப் பச்சையாகவோ, சமைத்தோ உலர்த்தியோ சாப்பிடலாம். உங்கள் சாப்பாட்டிலே உருளைக் கிழங்கு தாராளமாகச் சேருவது அவசியம். அப்படியே முழுத் தானிய ரொட்டிகளும் கூலங்களும்; ஆனால் இவை ஆகாரத்திலே கால்வாசிக்கு மேல் இருக்கப்படாது. நிறையப் பால் குடியுங்கள்.

கொழுப்புப் பொருள்களையும், மாப் பொருள்களையும் இயற்கைச் சர்க்கரைகளையும் கூடுதலாகச் சாப்பிடவேண்டும் என்று சொல்லுவது என்ன காரணத்துக்காக என்றால், அவைதான் உங்கள் தேக எடையை சீக்கிரம் சீக்கிரமாக அதிகப்படுத்தக்கூடியவை. கொழுப்பு அவுன்சுக்கு அவுன்சு அதிகப்படுத்தும். மாக்கூறும் சர்க்கரையுமோ என்றால், தங்களுடைய எடையிலும் மூன்று நான்கு மடங்கு அதிகமான எடையுடன் கூட்டுவிக்கும். இது எப்படி முடியுமென்று நீங்கள் யோசிக்கலாம். அவைகளுக்கு ஜலத்தை இழுத்து வைத்துக் கொள்ளக்கூடிய ஆற்றல் இருக்கிறது; அதினாலேதான். உப்பு தனது எடையைப் போல நூறு மடங்கு ஜலத்தை வைத்துக் கொள்ளக்கூடியது.

சாப்பாட்டுக்கு, குறிப்பாக — காலைச் சாப்பாட்டுக்கு அரை மணி நேரத்திற்கு முன்னால் ஒரு கிளாசு ஆரஞ்சு ரசமோ, வேறு பழ ரசமோ குடியுங்கள். தாராளமாகப் பழ ரசம் சாப்பிடுங்கள். அப்படியே ஜலமும். மிட்டாய் வகைகளைத் தின்னவேண்டாம். அவை ஜீரணக் கருவிகளை உறுத்தும் தன்மை உடையன.

சாப்பாட்டுவேளைகளுக்கு இடையிலே பழ ரசங்களைத் தவிர வேறு ஒன்றும் சாப்பிடக்கூடாது. புதிய, பரிசுத்தமான காற்றிலே படுத்துத் தூங்குங்கள். தினமும் ஒரு ஓய்வுப் பொழுது இருப்பது நல்லது.

குழந்தை மெலிவாக இருந்தால், அவனை டாக்டரிடத்திலே காட்டி, ஏதாவது வியாதி இருக்கிறதா என்று பார்க்கச்செய்யுங்கள். தினந்தோறும் ஏதாவது தேகாப்பியாசம் செய்வது அவசியம். ஆனால் அளவுக்கு மிஞ்சிப் போய்விடக்கூடாது. மிகு களைப்பு கெடுதல்.

அஜீர்ணம் ஏற்படாதபடி பார்த்துக் கொள்ளுங்கள். மலச் சிக்கலுக்கு இடம் கொடுக்காதேயுங்கள். மகிழ்ச்சியாக இருங்கள். கவலை சதையைக் கரைக்கும். அப்படியே ஆத்திரமும் பரபரப்பும் மிகு உழைப்பும். ஆறுதலாக, நிதானமாக சந்தோஷமாக வாழுங்கள். —நல்வழி.

---

## கனடாவில் கட்டுப்பாடு

கனடாவில் ஒவ்வொருவருக்கும் வாரம் ஒரு அவுன்ஸ் தேயிலை அல்லது நாலு அவுன்ஸ் காப்பித் தூள் தான் கொடுக்கப்படும் என்று கனடிய வியாபார போர்டு அறிவித்திருக்கிறது.







## சோதனை போடும் அதிகாரம்

★

சர்க்கார் நிலம் எடுத்துக்கொள்வது சம்பந்தமாக காலதாமதமும் கஷ்டமும் ஏற்படுவதைத் தவிர்ப்பதற்காக, இந்தியத் தற்காப்புச் சட்டத்தின் கீழ் தங்களுக்கு அளிக்கப்பட்டுள்ள அதிகாரத்தை உபயோகித்து, இது விஷயமாக உள்ள விதியை இந்தியா கவர்ன்மெண்டார் மாற்றியுள்ளனர். இதன் பிரகாரம் இடம் கோரும் உத்தரவைப் பிறப்புவிக்கும் முன்னும் பின்னும் அக்கட்டிடத்துக்குள் நுழைவதற்கும், சோதனை போடுவதற்கும் அவர்களுக்கு அதிகாரம் இருக்கும். முக்கியமாகக் கடைகளும் கிடங்குகளும் தான் இது விஷயமாகப் பாதிக்கப்படும். இது வரையில், கட்டிடத்தின் சொந்தக்காரருக்கு உத்தரவு பிறப்பிக்கும் ஆபீஸர் கட்டிடத்துக்குள் நுழைந்து, சோதனை போட்டு சம்பந்தப்பட்ட பொருளை மறைக்க முயற்சிகள் நடக்காமல் தடுப்பதற்கு இடம் கோரும் விதிகளில் அதிகாரம் கிடையாது. தாவர சொத்து விஷயமாகவும், தகவல் விசாரிக்கப்படும் பொருள் விஷயமாகவும் வேறு விதிகளின் கீழ் இவ்வதிகாரம் உள்ளது. இருந்தாலும் ஒரு கம்பெனியிடம் உள்ளதாகவும், அது கவர்ன்மெண்டுக்கு வேண்டும் என்றும் கருதப்படும் பொருள் விஷயமாகக் கட்டிடத்துக்குள் புகுந்து சோதனை போட அதிகாரம் வேண்டும் என்றும், அதற்கேற்ப விதிகள் திருத்தப்பட வேண்டுமென்றும் கருதப்பட்டது. நீதி நடவடிக்கைகள் காரணமாக ஏற்படும் காலதாமதத்தையும் கஷ்டத்தையும் தடுப்பதே இத் திருத்தத்தின் நோக்கம். முக்கியமாக கடைகளிலும், கிடங்குகளிலும் உள்ள சாமான்களைக் கோருவது விஷயமாகத் தான் இத்திருத்தம் செய்யப்பட்டுள்ளது. பொதுஜனங்களின் சுதந்திரத்தை இது ஒரு வகையிலும் பாதிக்காது என்று மத்திய சர்க்கார் தற்காப்பு இலாகா அறிக்கை ஒன்று கூறுகிறது.

— —







Edited, Printed and Published by S. MURUGAPPA for Dhana Vysian Company Ltd., at the Kumaran Power Press, Karaikudi. (S.INDIA)

